*Kumaraṉ*

*Āram 5, muttu 14*

*November 17, 1927*

Record no. 313

Registered No. M. 1823
Tel: KUMARAN, KARAIKUDI.

உ
சிவமயம்.

தனிப்பிரதி
விலை அணு ஒன்றரை.








"என்கடன் பணிசெய்து கிடப்பதே."

(வாரப் பதிப்பு.)

வியாழன் தோறும் வெளியிடப் பெறுவது.

"சுதரே உயிர்."  "கருணையே தெய்வம்."

ஆரம் ரு. } காரைக்குடி. பிரபவ-௵ கார்த்திகை-மீ ௨-௳ (17—11—27) { ௧அ
முத்துகச. } { பக்கங்கள்.

# உள்ளத்தனைய உவமை.

திருவாளர் ரா. பி. சேதுப்பிள்ளை பி. ஏ., பி. எல்.



இறை நலம் திகழும் இயற்கை அழகையும், அறிதற்கரிய மாந்தர் இயற்கையையும், மாண்புற விளக்குவதே நல்லியற் கவிஞரது நோக்கமாகும். இயற்கை அழகினைக்கண்டு களித்த அறிஞர் அவ்வின்பத்தைப் பிறரும் பெற்று மகிழுமாறு அழகிய சொற்களால் எழுதி அமைப்பார்கள். அவ்விதம் எழுதி அமைக்கும் முறையில் உள்ளதை உள்ளவாறுரைக்கும் அறிஞரே உயர்ந்தவரென்று உலகம் புகழ்கின்றது. பலதிறப்பட்ட மக்கள் இயற்கையை எழுதப்போந்த அறிஞன் அவரவர் பண்பிற்கேற்ற பதங்களை அமைத்து வழங்கும் பான்மை இயற்கைக்குப் பொருத்தமாய் இலங்குகின்றது. நலங்கள் யாவும் அமைந்து திகழும் ஓர் நங்கையின் அழகினை எழுதப்போந்த நற்றமிழ்ப் புலவர் அம்மங்கையின் முகம் மதிபோன்ற தென்றும், நுதல் பிறைபோன்ற தென்றும், விழி வேல்போன்ற தென்றும், பல் அரும்புபோன்ற தென்றும், இதழ் பவளம்போன்ற தென்றும், இவ்வாறு மதியையும், மற்றைய பொருள்களையும் உவமைகூறி மகிழ்வார். இத்தகைய உவமைகள் அமைப்பதே அழகென்றும் அமையாதிருத்தல் இழுக்கென்றும் கருதப்பட்டது. எந்நாட்டில், எக்குலத்தில் பிறந்த நங்கையேயாயினும் இவ்வாறு உவமிக்கப்படுதல் கவி மரபாய் அமைந்தது. இத்தகைய புனைந்துரை-இயற்கைக்குப் பொருத்தமற்றதாய் கற்போர் மனத்தில் எவ்வகை ஊக்கத்தையும் உணர்வையும் எழுப்பாது பன்முறை கண்ட உயிரற்ற ஓவியம்போல உள்ளத்தைச் சலிக்கச் செய்தது!

* * *

இத்தகைய கவி மரபின் கடுமையால் கட்டுண்டு வருந்தும் தமிழ் மக்கள் உள்ளம் இயற்கைக் கவியின் இனிமையை யறிந்தபொழுது இன்புறுமென்பது சொல்லாமலே அமையும். ஆயர்குலத் தலைவனுய நந்தகோன் அழகிற் சிறந்த தன் மகளது நலத்தைச் சீவகனிடம் எடுத்துரைக்கப் போந்தபொழுது,

"வெண்ணெய் போன்று ஊறினியள்
மேம்பால்போல் தீஞ்சொல்லள்
உண்ண வுருக்கிய ஆ நெய் போல்
மேனியள்"

என்று அம்மங்கையின் நலத்தைப் புகழ்ந்துரைத்தான். ஆயர்குலத்தில் தோன்றி, ஆவின்பாலும் வெண்ணெயும் நெய்யும் நன்குயறிந்த நந்தகோன் தன் மங்கையின் வளமார்ந்த திருமேனி வெண்ணெய்போல் மென்மை வாய்ந்ததென்றும், உருக்கு நெய்போல் ஒளி பொருந்தியதென்றும், கரவறியாத அக்கன்னியின் சொற்கள் கறந்த பால்போல் இனியனவென்றும் புகழ்ந்துரைத்த நலம் இயல்பாய் எழுந்த கருத்தா யிலங்குகின்றது. அம்மங்கையின் மென்மையை உணர்த்த மயிலையும்; மழலை மொழியை உணர்த்தக் குயிலையும், வருந்தி அழையாது தான் கண்டறிந்த இனிய பொருள்களை உவமையாய் எடுத்தமைத்த நலம் இயற்கைக்குப் பொருத்தமாய் இலங்குவதாகும்!

இன்னும் குன்றக்குறவர் ஆநிரை கவர்ந்த முறையைக் கூறப்போந்த ஆயர்,

"மத்தம் புல்லிய கயிற்றின் மற்றவர்
அத்தலைவிடின் இத்தலைவிடார்"

என்று ஆயர்குலப் பெண்களிடம் கூறும் அழகு இயற்கைநலம் சான்றதாகும். மத்தில் கயிற்றைச் சுற்றி பாறைபோல் உரைந்த தயிர்த்தாழியில் அமைத்து கயிற்றின் இரு முனையையும் இரு கையாற்பற்றி ஒரு முனையை நெகிழவிட்டு மற்றொருமுனையை இழுத்து மத்தைச் சுழற்றி தயிர் கடையும் முறைபோல், குறவரும் இத்தலையை நெகிழவிட்டாராயின் அத்தலையை நெகிழவிடாது நிரையைக் கொண்டு போயினர் என்று ஆயர் அமைத்த உவமை அவரது உள்ளத்தனையதாகும். ஆநிரை கவர்ந்த முறையை ஆயர் குலப் பெண்கள் அறியவேண்டுமோயின் இதனினும் சிறந்த இயற்கை உவமை அமைத்தல் இயலாதென்பது சொல்லாமலே விளங்கும்!

* * *

இவ்வாறு ஆயர் குறவரோடு பொருது வலியழிந்து அமர்க்களத்தில் அங்குமிங்கும் சிதறியோடிய தன்மையைக் கூறப்போந்த சிந்தாமணி யாசிரியர், ஆயர் அறியும் ஓர் அழகிய உவமை அமைத்தார். தம்மை எதிர்த்த ஆயர்மீது குன்றக்குறவர் மழைபோல் அம்புகளைச் சொரிந்தாரென்றும், அந்நிலையில் ஆயர் மத்தாற் கடைந்த தயிர்போல எங்கும் சிதறியோடினர் என்றும் கருதிய கவிஞர்,

"பாயுமாரிபோற் பகழி சிந்தினர்
ஆயர் மத்தெறி தயிரின் ஆயினர்"

என்று செம்மையா யமைத்தார். இவ்வுவமையின் இயற்கைநலம் அறிந்த கவியரசராய கம்பர், சிந்தாமணியின் செவ்விய மொழிகளைப்போற்றும் சீலம் சாலவும் சிறந்ததாகும். ஆதி மன்னனுய தசரதன் நல்லோரை நலிந்த சம்பரன் என்னும் அசுரனை அமர்க்களத்தில் அழித்த ஆற்றலைப் புகழப் போந்த கம்பர்,

"தயிருடைக்கும் மத்தென்ன
உலகை நலி சம்பரனைத் தடிந்த
[அந்நாள்"

என்று சிந்தாமணியின் உவமையைப்போற்றி யமைத்தார். இன்னும் கடலைக் கடைந்து அமுதெடுத்த வாலி, தன் வலிய கரங்களால் தம்பியின் உடலைக் கடைந்தான் என்று கவி கூறும் உவமையிலும் சிந்தாமணியின் சிறந்த மணம் கமழக் காணலாம்.

"அடல் கடந்த தோளவனை அஞ்சி வெம்
குடல் கலங்கி எம்குலம் ஒடுங்க முன்
கடல் கடைந்த வெங்கர தலங்களால்
உடல் கடைந்தனன் இவன் உவந்தனன்"

என்று வாலியின் கொடுமையை அனுமன் இராமனிடம் எடுத்துரைத்தான்.

* * *

இன்னும் தெய்வப் புலமைத் திருவள்ளுவனர் எழுதிய திருக்குறள் என்னும் திருந்திய நூலைப் போற்றிப் புகழ்ந்த புலவர்களில் மருத்துவன் தாமோதரன் என்னும் பெரியாரும் ஒருவராய் விளங்குகின்றார். தமிழ் மொழியில் தக்க புலமை வாய்ந்திருந்த தாமோதரனர் மருத்துவ நூல் புலமையும் பெற்றிருந்தமையால், அவரை மருத்துவன் தாமோதரனர் என்று தமிழகம் வழங்கி வந்தது. இத்தகைய தாமோதரனர் கூறிய சாற்றுக் கவியில் அவர் ஒவ்வொரு நாளும் கையாளும் மருத்துவ முறையினின்றும் அருளிய உவமை உலப்பிலா இன்பம் அளிப்பதாகும்.

"சிந்தி நீர்க்கண்டம் தேரிசுக்கு தேன் அளாய்
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில்--காந்தி
மலைக்குத்துமால்யானைவள்ளுவர்முப்பாலால்
தலைக்குத்துத் தீர்வு சாத்தற்கு"

என்று தாமோதரனர் தாமறிந்த மருத்துவ முறையினின்றும் ஓர் உவமையை மாண்புற வழங்கினர். சிந்திக் கொடியின் மாவும், சுக்கும், தேனும் கலந்து மோந்த பொழுது தலைக்குத்துத் தீரும் தன்மைபோல், அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றும் கலந்த திருக்குறள் மணம் வீசியபொழுது சாத்தனரது தலைக்குத்துத் தீர்ந்தது என்று மருத்துவனர் கூறிப்போந்தார். இவ்வாறு தலைக்குத்துத் தீர்ந்த சாத்தனர், தமிழ் மொழியில் தலைசிறந்த புலமையும் பற்றும் உடையாராய்த் திகழ்ந்தார். வளங்கெழுகூலமாய எண்வகை விளைபொருள்களில் வாணிகம் செய்த காரணத்தால் இப்புலவர் கூலவாணிகன்சாத்தன் என்று பெயர் பெற்றார். இதனை,

"இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப
வளங்கெழு கூலவாணிகன் சாத்தன்
மாவண் தமிழ்த்திறம் மணிமேகலை துறவு
ஆறைம் பாட்டினுள் அறிய வைத்தனனே"

என்னும் மணிமேகலைப் பதிகம் இனிது விளக்குகின்றது. சாத்தனர் சிலப்பதிகாரம் செய்த இளங்கோவடிகளது சிறந்த நண்பராய்த் திகழ்ந்தாரென்றும், சிலப்பதிகாரம் முற்றுப்பெற்றவுடன் சாத்தனர் அதனைக் கேட்டனரென்றும், அவ்வாறே மணிமேகலை முற்றியபொழுது இளங்கோவடிகள் அந்நூலைக் கேட்டருளினரென்றும் நன்கு அறியப்படுகின்றது. இத்தகைய புலமை வாய்ந்த சாத்தனரை தண்டமிழ்ச் சாத்தன் என்றும் தமிழ்நூல் வழங்குகின்றது. தமிழ் வளர்ந்த மதுரைமா நகரிலேயே இப்புலவரும் வாழ்ந்து வந்தாரென்பது "மதுரைக் கூலவாணிகன் சாத்தன்" என்று சிலப்பதிகாரப்பதிகம் கூறுமாற்றால் செம்மையாய் அறியப்படும்.

* * *

இக்கவிஞருக்கு சீத்தலைச் சாத்தனர் என்னும் சிறப்புப் பெயர் அமைந்த காரணம் பெரியதோர் வியப்பாக விளங்குகின்றது. தமிழ் மொழியில் தலையாய பற்றுடையவராய் இலங்கிய இப்புலவர், பிழை மலிந்த நூல்களைக் காணுந்தோறும், மனம் நொந்து தமிழ் மொழிக்கு நேர்ந்த குறையைத் தனக்கு நேர்ந்த குறையாகக் கருதித் தன் தலை விதியை நொந்து கையில் அமைந்த கூரிய எழுத்தாணியால் தலையில் குத்திக் கொள்வார் என்றும், அதனால் அவர் தலை புண்பட்டுப் போயிற்றென்றும், அக்காரணத்தால் அவர் சீத்தலைச் சாத்தனர் என்று பெயர் பெற்றார் என்றும் பழங்கதை கூறுகின்றது. இவ்வாறின்றி சீத்தலை என்னும் ஓர் சிற்றூரில் பிறந்தமையால் சீத்தலைச் சாத்தனரென்று அவர்க்குப் பெயர் அமைந்ததென்று சிலர் கருதுகின்றார்கள். சீத்தலை என்பது அவர் தலையைக் குறிப்பதாயினும் அன்றி ஊரைக் குறிப்பதாயினும் அப்புலவர் தலைக்குத்தால் வருந்தினர் என்று தாமோதரனர் கவியால் தெளிவாகின்றது. பிழைகள் மலிந்த நயமில்லா நூல்களைப் பார்க்கும் பொறுப்புடைய புலவர் தலை நோயால் வருந்துவதும் இயல்பேயாகும். இவ்வாறு இடையறுத் தலைநோயால் வருந்திய சாத்தனர், முப்பாலில் செப்பமாய் அமைந்த வள்ளுவர்நூலை ஆராய்ந்தபொழுது அதன் நயத்தால் நோய் தீர்ந்து இன்புற்றார் என்று கருதுவதும் பொருந்தும். வள்ளுவர் அமைத்த முப்பாலுக் குவமையாக மருத்துவ முறையிற் கண்ட முப்பொருளை எடுத்துவமித்த நயமும், மூன்றும் பாலாயமைந்த இன்பத்தை தேனோடு உவமித்த நலமும் தாமோதரனது இயற்கைத் தமிழறிவிற்கு இணையற்ற சான்றாகும்.

* * *

இன்னும் தமிழ் நயம் கொழிக்கும் தெய்வ மணக்கும் செய்யுளால் அறுபான்மும்மை அடியாரது பெருமை கூறப் போந்த செந்தமிழ்ப் புலவராய சேக்கிழார் அமைத்துள்ள இயற்கை உவமைகள் சாலவும் இனியனவாம். காளத்தி மலையில் வளர்ந்து வந்த திண்ணன் என்னும் வேடன் கன்னி வேட்டைக்குப் புறப்பட்டபொழுது நாணும் காடனும் அவனுக்குத் துணையாகக் கானகம் சென்றார்கள். கானகத்தில் வெகுநேரம் வேட்டையாடி ஓர் வலிய பன்றியைத் திண்ணன் வாளாலெறிந்து கொன்றான். அப்பன்றியின் தசையை நெருப்பில் வெதுப்பிப் பதப்படுத்தும் பொழுது திண்ணனும் நாணனும் அக் காளத்தி மலையில் அமர்ந்திருக்கின்ற தேவரைக் கும்பிட்டு வ[illegible] அம் மலையில் அமர்ந்த [illegible]

## தேவீ வதனு.

ஆண்டி எழுதுவது.

அங்கம் 111

குமுதலோசனனுடைய ஆஸ்தான மண்டபம்

(சென்றவாரத் தொடர்ச்சி.)

*குமுதன்:*—நானின்னும் பிழைத்தெழுந்திருக்கவில்லையே அதினின்றும்! ஆம், இதுவே அவன் விரும்பியிருந்ததாயின் இவ்வளவு வேதனையொன்று மின்றி நம்மைக் காப்பாற்றியிருக்கலாமே! நாமும் அவனை ஓர் கடவுளைப்போலும் சுதந்திர நாதனைப் போலும் உபசாரம் செய்திருப்போமே!... தலையை அசைப்பானேன்?... ஆனற் பார்ப்போம், ஜனங்களே தீர்ப்புச் சொல்லட்டும். ஜனங்களே பதிலளிக்கட்டும்! (கூட்டத்தைப் பார்த்து) நீங்கள் கேட்டீர்களா? இவன் ஏனிவ்வாறுரைக்கின்ருனென்றெனக்குத் தெரியவில்லை; ஆயினும் அவள் சொன்னது சொன்னது தானுகையால் நீங்களே தீர்மானியுங்கள்...... ஒருவேளை நீங்களவளை நம்பக்கூடும். ஏனெனில் அவள் உங்களை ரக்ஷித்திருக்கிருள்...நீங்களவளை நம்புகின்றீர்களாயின் சொல்லுங்கள்! அவளை நம்புகிறவர்கள் கூட்டத்தினின்றும் வெளியே வந்து பேதையான மானிடயுத்தத்தைப் பொய்யென்றுரைக்கட்டும்!...... நம்புகிறவர்களெல்லோரும் வரலாம்! அவர்களைப் பார்க்க விரும்புகின்றேன் யான். அவர்கள் எத்தகையார் என்பது தெரியவேண்டு மெனக்கு!

[மகரலோசனன் மாத்திரம் கூட்டத்திலிருந்து முன்னே பாய்ந்து வந்து நின்று]

*மகரன்:*—நானவளை நம்புகின்றேன்! [கூட்டத்தினிடையில் தாழ்ந்தகுரலில் சிலர் முணுமுணுக்கின்றனர்கள்.]

*குமுதன்:*—நீர்தானு! அவர்களுடைய கூட்டாளியோ நீர்!......மற்றவர்கள், மற்ற ஜனங்கள், நம்பக்கூடிய மீதிப்பேர்களெங்கே?...... (வதனுவைப் பார்த்து) கேட்டனையோ? நீ காப்பாற்றிய ஜனங்களே இவ்வறையின் பல மூலைகளிலுமிருந்து புறப்படுகின்ற பரிகாச வார்த்தைகளைக் கேட்டு ஒடுங்குகின்றனர்.........முறுமுறுத்த சில பேர்களுங்கூட வெளிவந்திடத் துணியவில்லை. நானும்—

*வதனு:*—என்னை நம்பிட அவர்களுக்கு ஏதுவில்லை; ஆனுலுமக்குண்டு, என்னைக் காதலித்தவுமக்கு!

*குமுதன்:*—ஓகோ, நான் உன்னைக் காதலித்தமையால் உன்னுல் ஏமாற்றப்பட்ட பேதையுமாகவேண்டுமோ?......மாட்டவே மாட்டேன்!......இதோக் கேள்!...நானுன்டன் சாந்தமாகவே பேசுகின்றேன். கோபமெல்லாம் தீர்ந்தது. அளவிலதிகம் பட்டுவிட்டேன் நான்; திடீரென்று கிழத்தன்மை வந்தாற்போற்றேன்றுகின்றது......இல்லை, நான் கோபப்படவில்லை......என்னிடத்திலின்னுங் கோபம் தங்கி நிற்கவுமில்லை—அதற்கு பதிலாக வேறு யாதேனும் வரலாமென்றும் நினைக்கின்றேன்,—வயோதிகமோ சித்தக்கலக்கமோ எதுவோ தெரியவில்லை. ......ஒரு காலத்தில் என் இன்பம் எங்கேயென்று என்னுள்ளிலேயே தேடுகின்றேன், ஆராய்கின்றேன், தடவிப்பார்க்கின்றேன்... ஓராசையிருக்கின்றதெனக்கு, ஒரே ஆசை தான்; என்னுற் பற்றிக்கொள்ள வியலாத பலவீனமான ஆசையாகுமது......ஒரு வார்த்தைகூட அதனைத் தொலைத்துவிடலாம்; ஆயினும் என் தற்கால மனத்தளர்ச்சியில் நான் முயற்சி செய்தே தீரவேண்டியிருக்கின்றது......வதனு, நான் முற்றிலுமறியுமுன் இக்கூட்டத்தைத் திருப்பியழைத்தது தவறுதான்.........இவ்வரக்கனுலுனக்கேற்பட்ட துன்பங்களை யெல்லாம் வெளிப்படுத்துவது உன்னை எவ்வளவு நோகச் செய்யுமென்பதை நான் ஞாபகத்தில் வைத்திருக்க வேண்டியிருந்தது......ஆம், தனித்திடும் வரையிலாவது நான் பொறுத்திருக்க வேண்டியிருந்தது; அப்பொழுதுண்மைமையை—அவ்வருவருப்பான வுண்மையை—ஒப்புக்கொண்டிருப்பாய்......ஆனலது கஷ்டம்!—எனக்கும், எல்லோருக்கும் தெரிந்த விஷயந்தானே!......அதை மறைத்து யாது பயன் வதனு! அதற்குள்ள காலங் தவறிவிட்டதே......இப்பொழுததற்கு வேறு வழியுமில்லை; நீயுங்கூட உணரவேண்டுமதை.....இம்மாதிரி சந்தர்ப்பங்களில் யுக்திவாதங்களால் முடியாது—

*வதனு:*—நாதா, என்னை நன்ருய்ப் பாரும்; இதோ நான் பேசும்பொழுது என் ஊக்கமும் சத்தியமும் எல்லாம் என் கண்களிற்றேன்றியிருக்கின்றன!......சத்தியமாக, சத்தியமாக! இதை நம்புவீர்—அவன் என்னைத் தொட்டதில்லை.

*குமுதன்:*—சரி......அது நன்றே! மிகவும் நன்றே! இப்பொழுது நானெல்லாமறிகின்றேன். என்னைவிட்டு யாவும் போய்விட்டது......ஆம், அதுவே உண்மை! அதாவது, அதுவே காதல்!......ஆம், நானறிகின்றேன், நீ யவனைக் காப்பாற்ற முயலுகின்றுய்......நான் காதலித்த ஸ்திரீ இவ்வளவு வேகமாக மாறிவிடுவாளென்றுணர்ந்தேனில்லை......ஆனுலும் இவ்வழியினுலொன்றும் அவனைக் காப்பாற்ற முடியாது! (குரலை உயர்த்திப் பேசி) எல்லோருங் கேளுங்கள்.கடைசியாக நானேர் வாக்குறுதி செய்கின்றேன்......என்னைத் தடைசெய்ய வேண்டுமானுலிப்பொழுது மானுஷாதீதமான முயற்சி செய்யவேண்டும்; என் மீதுள்ள பிடி என்னைவிட்டுத் தவறுகின்றது. கடைசி முயற்சி யொன்று செய்து பார்க்கின்றேன். நான் ஒடுங்கிடுவதற்கு இன்னும் கணப்பொழுதே யிருக்கின்றது...... அக்கணத்தை நான் தவறவிட மாட்டேன்......உங்களெல்லோருக்கும் நான் பேசுவதைக் கேட்க முடிகின்றதா? அல்லது என் சத்தம் தளர்ச்சியடைந்து விட்டதோ? இன்னும் அருகில் வாருங்கள். இன்னு மருகில்......இந்த ஸ்திரீயையும் அந்தப் புருஷனையும் காண்கின்றீர்களா?

(தொடரும்.)

---

அறியாத நாணன், தன் இயற்கை மொழிகளால் இயம்பும் அழகு சாலவும் இனியதாகும்.

> "சேணுயர் திருக்காளத்தி மலைமிசை
> எழுந்து சேவ்வே
> கோணமில் குமித் தேவர்
> இருப்பர், கும்பிடலா மென்றன் "

என்று வேடருக்குரிய இயற்கை மொழிகளும் மனப்பான்மையும் இனிது விளங்கும் வண்ணம் இறைவனை 'கோணமில் குமித்தேவர்' என்றும் அவரைக் 'கும்பிடலா மெ'ன்றும் ஆசிரியர் அமைத்தருளிய நயம் அளவிலா இன்பம் தருவதாகும். இவ்வாறு இலங்கிய குமித்தேவரைக் கண்டபோது திண்ணன் மனங்குழைந்து வேகமாய் ஓடிச்சென்று அப்பெருமானைத் தழுவிய பான்மையை,

> "மாகமார் திருக்காளத்தி
> மலையெழு கொழுந்தாயுள்ள
> ஏக நாயகரைக் கண்டார்
> எழுந்தபே ருவகையன்பின்
> வேகமானது மேற்செல்ல
> மிக்கதோர் விரைவினேடு
> மோகமா யோடிச் சென்றர்
> தழுவினர் மோந்து நின்றர் "

என்று சேக்கிழார் செம்மையா யுரைத்தார். காளத்திநாதனைக் கண்ட திண்ணனர் காடனையும் நாணனையும் மறந்து கடும்பசியையும் காணராய், பற்றற்ற அப்பெருமானையேபற்றி நின்றர். காளத்திநாதரைப்பற்றி விடாத திண்ணன் மனத்திண்மையைக் காடனுக்கு உரைக்கப் போந்த நாணன்,

> "அங்கி வன்மலை யிற்றேவர்
> தம்மைக் கண்டணைத்துக் கோண்டு
> வங்கினைப் பற்றிப் போகா
> வல்லுடும்பென்ன நிங்கான் "

என்று சொல்லிய சொற்கள், வேடன்வாயில் இயற்கையாய் வரும் சொற்களாம். மரப்பொந்தினைப் பற்றி விடாத வலிய உடும்பு போல, மலையில் அமைந்த பெருமானைத் திண்ணன் பற்றி விடானயினன் என்னும் உவமை இயற்கைநலம் பொருந்தித் திகழ்வது இனிதறியப்படும். ஒரு பொருளை வலிமையாய்ப் பற்றுவதும், அவ்வாறு பற்றிய பற்றை விடாது நிற்பதும் உடும்பென்னும் ஓணனது தன்மையாகும். மரமும் செடியும் நிறைந்த மலைநாட்டில் நாள்தோறும் வேட்டையாடித் திரியும் நாணன் மரப்பொந்தில் அமைந்த உடும்பின் இயல்பை நன்குணர்ந்து அதன் தன்மையை உவமையாய் அமைத்த அழகு உள்ளத்தைக் கவர்வதாகும்.

* * *

இத்தகைய இயற்கை உவமைகள் இயற்கவிஞரது நூல்களில் பலவாய் இலங்கக் காணலாம். கவி மரபென்னும் கடும் பாசத்தால் கட்டுண்டு உயிரிழந்த உவமைகளைக் கண்டு சலித்த உள்ளம் இயற்கை உவமைகளைக் கண்டபோது இன்புற்று மகிழ்வது இயல்பேயாகும்.

## பதிலுக்குப் பதில்.

சமீபத்தில் நடைபெற்ற சேலம் ஜில்லா அரசியல் மகாநாட்டில் தலைமை வகித்த திருவாளர். வ. உ. சிதம்பரம் பிள்ளை யவர்கள் தனது முன்னுரைப் பிரசங்கத்தில் பார்ப்பனர் பார்ப்பன ரல்லாதார் பிரச்னையைப்பற்றிப் பின் வருமாறு கூறினர்:—

> "நோய்நாடி நோய்முதல் நாடிஅது தணிக்கும்
> வாய்நாடி வாய்ப்பச் செயல் "

என்றர் நம் பெரியார். பிராமணர்—பிராமணரல்லாதார் சண்டை நோயோ அளவு கடக்கும் நிலைமைக்கு வந்து விட்டதென்பது இம்மாகாணத்திலுள்ள ஒவ்வொரு ஆண்மகனுக்கும் பெண்மகளுக்கும் நேரில் தெரிந்த விஷயம். ஆதலால் அச்சண்டைகளைப் பற்றியோ, அவற்றின் தற்கால நிலைமையைப் பற்றியோ நாம் ஆராயவேண்டிய அவசியம் இல்லை. அச்சண்டை நோயின் முதல் (காரணங்கள்) கூடப் பிராமணரல்லாதார்களிற் பலர்க்கும், பிராமணர்களிற் சிலர்க்கும் நன்றாகத் தெரியும். அக்காரணங்களைத்தெரியாமலிருக்கிற பிராமணரல்லாத சிலரும் பிராமணர் பலரும் பிற மாகாணத் தேசாபிமானிகளும் தேசத் தலைவர்களும் தெரிந்துகொள்ளும்பொருட்டு இங்கு கூறுகின்றேன்.

௧. பிராமண ஜாதியார்க ளெல்லாம் மேலானவர்களென்றும், மற்றைய ஜாதியார்களெல்லாம் கீழானவர்களென்றும், தங்கள் சொல்லாலும் செயலாலும்காட்டி மற்றைய ஜாதியார்களை இழிவுபடுத்தி வருகிறர்கள்.

௨. பிராமணர்களே பிராமணரல்லாதார்கள் கடவுளை அடைவதற்குரிய வழியைக் காட்டும் குருமார்களென்றும், பிராமணரல்லாதார்கள் குடும்பங்களில் நிகழும் சகல மங்கல அமங்கலச் சடங்குகளையும் நடாத்துவிப்பதற்குரிய ஆச்சாரியர்கள் என்றும் கூறிப் பிராமணரல்லாதார்களின் பொருள்களை அவர்கள் தாய் வயிற்றில் உற்பவித்த காலம் முதல் அவர்கள் இறக்கும் வரையிலும், அவர்கள் இறந்தபின் அவர்கள் மக்கள் உயிரோடிருக்கும் காலம் முடியும் வரையிலும் கவர்ந்துகொண்டு வருகிறர்கள்.

௩. சர்க்கார்உத்தியோகங்களையும், ஸ்தலஸ்தாபன உத்தியோகங்களையும், பொதுஸ்தாபன உத்தியோகங்களையும் வகிப்பதற்குரிய அறிவும் திறமையும் உரிமையும் தங்களுக்கே உண்டென்று சொல்லி அவ்வுத்தியோகங்களையெல்லாம் தாங்களே கொண்டு அவற்றின் சம்பளம், அதிகாரம், செல்வாக்கு முதலியவற்றை எல்லாம் அபகரித்து வருகின்றனர்கள் பிராமணர்கள்.

இம் மூன்றும் பிராமணர்—பிராமணரல்லாதார் சண்டை நோயின் முதல்கள் (காரணங்கள்.) இக் காரணங்களை ஒழிப்பதற்குரிய வழிகளை ஆராய்வோமாக.

முதலாவது காரணம் எப்படி ஏற்பட்டதென்றல், பிராமணரல்லாதார்களாகிய தமிழர்களின் முன்னேர்கள் பிராமணர்களின் முன்னேர்களாகிய ஆரியர்களை "மிலேச்சர்" என்றும், யாகத்தின் பெயரால் கண்டவற்றை யெல்லாம் தின்பவர்களென்றும், நினைத்தவற்றையெல்லாம் செய்பவர்களென்றும், சொல்லியும், நிகண்டு முதலிய நூல்களில் எழுதி வைத்தும், அவர்களைத் தொடாமலும், அவர்கள் தொட்ட பொருள்களைக் கொள்ளாமலும், அவர்களைத் தொடநேர்ந்தபோது குளித்தும் அவர்களை இழிவுபடுத்தி வந்தார்கள். அவ்விழிவை ஒழிப்பதற்கு வழி என்ன என்று அவ்வாரியர்கள் ஆலோசனை செய்தார்கள்.

> "நன்னிலைக்கண் தன்னை
> நிறுப்பானும் தன்னை
> நிலைகலக்கிக் கீழிடு வானும்—
> தான்; தன்னை
> மேன்மேல் உயர்த்து
> நிறுப்பானும் தன்னைத்
> தலையாகச்செய்வானும் தான்"

என்ற உண்மையைக் கண்டார்கள்.

உடனே தங்களைப் பிராமணர்கள் என்றும், மற்றைத் தமிழர்களெல்லாம் சூத்திரர்கள் என்றும் சொல்லவும் எழுதவும் தலைப்பட்டார்கள்; அவ்வாறு தாங்கள் மேலான ஜாதியார் என்றும், தமிழர்களெல்லாம் கீழான ஜாதியார்கள் என்றும் நடக்கையிலும் காட்டினர்கள். சிறிது காலத்தில் அவர்கள் மேலான ஜாதியாராகவும், தமிழர்கள் கீழான ஜாதியார்களாகவும் அறியார் பலரால் கருதப்பட்டார்கள். தமிழர்களின் முன்னேர்களால் தங்களுக்கு ஏற்பட்ட இழிவு நோய் தாங்கள் மேலான ஜாதியார்கள் என்று கூறிய மருந்தால் நீங்கிப் போயிற்று. அந்த மருந்தையே தமிழர்கள் கைக்கொள்ளின் அவர்களுக்கு இப்போது ஏற்பட்டிருக்கிற நோய் நீங்கிப்போம். அதாவது, பிராமணரல்லாத ஜாதியார்களில் ஒவ்வொருவரும் தாம் பிராமணருக்கு மேற்பட்ட ஜாதியாரென்று கருதிப் பிராமணர் மற்றை ஜாதியார்களை நடத்துகிறதுபோலப் பிராமணர்களை நடத்தி வருவாராயின், தம் ஆரோப இழிவு நோய் போய்விடும் இந்நோய் முதலைப் போக்குவதற்கு வேறு மருந்து தேட வேண்டுவதில்லை.

இரண்டாவது காரணம், மேற்கண்டபடி தாங்கள் மேலான ஜாதியார்கள் என்று கொண்ட கொள்கை அழியாதிருக்கும் பொருட்டுப் பிராமணர்கள் மற்றை ஜாதியார்களுக்கு விதித்த அபராதத் தண்டனை. அத் தண்டனையை மாற்றிக்கொள்வதற்குரிய அதிகாரம் பிராமணரல்லாதார்கள் கையிலேயே இருக்கிறதைக் கண்டுபிடித்து நம் திருவாளர். ஈ. வெ. இராமசாமி நாயக்கரவர்கள் பிராமணரல்லாதார்களுக்குக் கூறி அதனை உபயோகிக்கும்படி செய்துகொண்டு வருகிறர்கள். அவ்வதிகாரத்தைப் பிராமணரல்லாதார்கள் ஊக்கத்துடன் உறுதியாகச் செலுத்தித் தங்கள் அபராத தண்டனையை மாற்றிக்கொள்வார்களென்று நம்புகிறேன்.

பிராமணர்-பிராமணரல்லாதார் சண்டைக்குரிய மூன்றவது காரணத்தைப் போக்குவதுதான் மிகக் கஷ்டமான காரியம். இக்காரண விஷயத்தைப்பற்றித் தேசத் தலைவர்களென்று சொல்லப்படுகிற பிராமண சகோதரர்களில் சிலர் பேசுகிற பேச்சுகளைப் பார்க்கும்போது மிக வியப்புத்தோற்றுகின்றது. இராஜாங்க உத்தியோகங்களைக் கவருவதற்காக இராஜாங்கத்தாரோடு சேர்ந்து அவரைப் பலப்படுத்துகின்ற (பிராமணரல்லாதார் அடங்கிய) ஒரு கட்சியாரை ஒழிப்பதற்காக காங்கிரஸ்காரர்கள் இரட்டையாட்சிக்கு உதவிபுரிய வேண்டியவர்களாயிருக்கிறர்கள் என்று ஒரு பிராமணத் தலைவர் சில தினங்களுக்குமுன் பேசியிருக்கிறர். ஆ! என்ன ஆச்சரியம்! நமது தேசத்தில் நூறு பேர்களுக்கு மூன்று பேர்களாயிருக்கின்ற நம் பிராமண சகோதரர்கள், நமது தேசத்து இராஜாங்க உத்தியோகங்களில் நூற்றுக்கு தொண்ணூற்றேழு வீதமும், அவ்வுத்தியோகங்களில் இந்தியர்கள் பெறும் சம்பளத் தொகையில் நூற்றுக்கு தொண்ணூற்றேழு வீதமும் (இக்கணக்குச் சிறிது ஏறத்தாழ இருக்கலாம்.) அடைந்து வருகிற போது, பிராமணரல்லாதார்கள் இராஜாங்க உத்தியோகங் கவருவதற்காக இராஜாங்கத்தாரோடு சேர்ந்து அவரைப் பலப்படுத்துகின்றர்கள் என்று காங்கிரஸ் தலைவர் என்னும் பிராமணர் ஒருவர் பேசுவாராயின் மற்றைப் பிராமணர்கள் என்னென்ன பேசத் துணியமாட்டார்கள்? பிராமணர்கள் நம் தேசத்தில் சிறு தொகையினராயிருத்தலால் தம்முடைய உரிமைகளை மற்ற ஜாதியார்கள் கைப்பற்றிக்கொள்வார்கள் என்ற அச்சத்தால், சுய அரசாட்சியை உள்ளூர விரும்பமாட்டார்களென்றும், அவர்கள் சுய அரசாட்சிக்குப் பாடுபடுவதுபோல் நடிப்பதெல்லாம் தம் உறவினருக்கும், ஜாதியாருக்கும் இராஜாங்க உத்தியோகங்கள் வாங்கிக் கொடுக்கும் பொருட்டே என்றும் பிராமணரல்லாதார் சொல்வது உண்மை தானே என்று யானும் இப்பொழுது ஐயம் உறுகின்றேன்.

---



## பதில் வார்த்தை.

தேவகோட்டை திருவாளர் லெ. ராம. முத்துராமன் செட்டியார் எழுதுவது:-

குமரன் ஐப்பசி கக-உ பத்திரிகையில் வெளிவந்த காந்தி பேச்சை மறுத்து 'சிவநேசன்' ஆசிரியர் பின் வருமாறு எழுதியிருக்கிறர்:—

அடிகள் வருவார் விபூதியும் தீர்த்தமும் வேண்டும் வரமும் தருவாரென எண்ணி எதிர்பார்த்த அரிவையர் அவரடிகளல்லயெனவும் எதுவும் தர வந்தவரல்ல வாங்க வந்தவரெனவும் தெரிந்து கொண்டனர்.

பல்லக்கில் வருவாரோ எனக்கருதியவர்கள் பல லக்கில் பலபடப் பகர்வாரெனத் தெரிந்தனர்.

சமூக தேசிய சமயங்களைப் பற்றித் தமிழர் தர்மா தர்மமும் சரியானபடி தெரியாதாரைக் கேட்பது தவறென விடுத்தனர்.

இருவகை உலகமென்பது எல்லாப் பெண்களும் அறிந்ததனுற்றன் காதிலுங் கழுத்திலும் அணிந்து வந்தவைகளைப் பறிகொடாமல் காப்பாற்றிக் கொண்டனர்.

காவிரிப்புராணம் எவ்வளவு காலம் கேட்டாலும் காய்கறி கொடுத்தாலும் ஒன்றும் முழுகிப்போகாது.

உள்ளங்கவர்கள்வனை நான்முகத்தானும் நண்ணுணர்வானும் ஆண்டவனெனக் காண்கின்றேம். புறங்கவர் கள்வனை களவாண்டவனெனக் கண்ணுலும் காண்கிறேம் காதாலும் கேட்கிறேம். ஆனதால் ஆண்டவனிலும் களவாண்டவன் இரண்டக்ஷரம் அதிகமுடையவனே.

கண்ணுற் காணுங் கடவுள் காந்தியாரானுல் காந்தி தோன்றுமுன் கடவுளாயிருந்தவர் யார்? அந்தக்கடவுள் இறந்து விட்டாரா இந்தக் கடவுளுக்குப் பின்யார் கடவுளாவாரெனப் பெண்டுகள் கேட்கிறர்கள்.

இதனை ஊன்றிப் படிக்குமாறு நேயர்களை வேண்டுகிறேம். மகாத்மா காந்தி எதையும் தர வந்தவரல்ல,வாங்க வந்தவரே ;யென்றும், தர்மா தர்மம் தெரியாமல் வாயில் வந்தபடி பேசுபவரென்றும், புறத்தே இருக்கிற நகைகளைக் களவாட வந்தவரென்றும், களவாண்டவனுகிய காந்தி ஆண்டவனிலும் பெரியவனென்றும், இங்குள்ள பெண் மக்கள் காதிலுங் கழுத்திலுமணிந்து வந்த நகைகளைப் பறிகொடாமல் ! காப்பாற்றிக் கொண்டனரென்றும், காவேரிப் புராணம் எவ்வளவு காலங் கேட்டாலும் காய்கறி கொடுத்தாலும் ஒன்றும் முழுகிப்போகாதென்றுஞ் சிவநேசன் ஆசிரியர் எழுதியிருக்கிறர்.

இம் மாதிரியாக எழுதியிருக்குஞ் சிவநேசன் பத்திராதிபரின் பரிதாப நிலையை நேயர்கள் கூர்ந்து நோக்குதல் வேண்டும். காந்தியடிகளைத் திருடன் என்று இவர் கூறுகிறர். இதனுல் காந்தியடிகளுக்குக் குறைந்தது ஒன்றுமில்லை. அழுகிப்போன இவரது மனப்பான்மையையே இவ்வுரைகள் காட்டுகின்றன. எவ்வளவு விபூதியையும் ருத்ராக்ஷத்தையும் போட்டு மறைத்தாலும் தங்கள் மன நிலையை யாரும் நீண்டநாள் மறைத்துவைக்க முடியாது. காந்தியடிகளை இவ்வளவு புல்லிய வழியில்இது வரை திட்டியவர் யாருமில்லை. சிவநேசன் ஆசிரியரே இவ்வுரை வழங்கத் தகுதியுடையாரன்றி வேறு யாருளர்? இவர் உள்ளத்தினின் றெழுந்த மதிகெட்ட இவ்வார்த்தைகளுக்கு மதி வார்த்தை என்று மகுடமிட்டதனுல் இவருடைய மதியின் அளவு இவ்வளவே யென்று தெரிகிறது. ஒப்பற்ற மகானுக விளங்கும் மகாத்மாவையும் ஆசாரச் சீர்திருத்த நெறியினையும் தற்கால உலகப் போக்குக் கேற்ற திருத்தங்களையும் புறக்கணிக்கும் இவருக்குப் பத்திரிகை உலகில் வேலை என்ன என்பது விளங்கவில்லை. விபூதி ருத்ராக்ஷங்களை நிறைய அணிந்துகொண்டு ஊருணிக்கரையிலிருந்து காவேரிப் புராணம் படிப்பதே இவருக்குச் சாலும். மைசூர் ராஜ்யத்தில் பெய்யும் மழைத்தண்ணீர் சோழ நாட்டில் ஓடிக் கடலில் விழுகிறது. இந்த ஆற்றுக்குப் பெயர் காவேரி என்பது. இதன் நீர் உண்பதற்கும் ஆடுதற்கும் தகுதியாகவும் தூய்மையாகவு மிருக்கின்றது. இவ்வளவுதான் விஷயம். இதற்குத் தங்களுடைய சாண் வயிற்றுக்காக ஜன சமூகத்தைப் பாழ்படுத்தி வருமொரு கூட்டத்தார் புராண மெழுதி வைத்துக்கொண்டு வயிறுவளர்த்து வருகின்றனர். விடியு முன்னர் இந்த ஐப்பசி மாதத்தில் ஒவ்வொரு நாளும் கோயில்களிலும் குளக்கரைகளிலும் பிடுங்கித் தின்று வருகின்றனர். காவேரி ஒரு பெண்ணென்றும், அவள் ருதுவாகிவிட்டாளென்றும், அவளுக்குக் காதோலை, கருகுமணி, மஞ்சள் முதலியன கோடுக்க வேண்டுமென்றும், பருப்பும் பலாக் கொட்டையும் அவள் பிரியமாகச் சாப்பிடுவா ளென்றும், அரிசி, காய்கறி, பருப்பு, உப்பு, புளி, பழங்கள் முதலிய வயிற்றுச் சாமான் எல்லாவற்றையும் புராணம் படிக்கும் பேர்வழிக்குக் கொடுத்தால் காவேரி சந்தோஷப்படுவாளென்றும், காவேரிக்குக் கலியாணமாகிவிட்ட தென்றும், அவள் மாதத்துக்கு மூன்று நாள் வீட்டுக்கு விலக்கமாகிற ளென்றும் ஏட்டில் எழுதிவைத்து மானம் வெட்கத்தை விட்டுவிட்டு வயிற்றுக்காகப் படிக்கப்படும் காவேரிப் புராணத்தைச் சிவநேசன் ஆசிரியனைத் தவிர வேறு எவர் தான் போற்ற முடியும்? இம் மாதிரியான புரட்டு நூல்களை உண்மையென்று கருதும் இவருக்குக் காந்தியடிகளின் அறவுரைகள் ஆயுள்வரை விளங்கப் போவதில்லை. காந்தியடிகள் கண்ணுலே காணும் கடவுளாக விளங்குகிருரென்று குறிக்கப்பட்டதற்கு மறுப்பெழுதப் புகுந்த இவர், கண்ணுலே காணமுடியாத கடவுள் யாரென்று கேட்டிருந்தால் ஏதாவது பொருளிருந்திருக்கும். காந்திக்கு முன்னுல் கடவுள் யார் பின்னுல் கடவுள் யார் என்று கேட்கும் புத்தியை மாக்கால் கொண்டுதா னளவிடவேண்டும். கண்ணுற்காண முடியாதவராகக் கடவுள் என்று மிருக்கிறர். கண்ணுற் காணும்படி உலகத்தில் கடவுளவதாரமாகத் தோன்றுவதுண்டு என்பதுண்மையானுல் அவ்வடிவம் தற்போது காந்தியடிகளின் திருவுருவமே யாகும் என்பதில் ஐயமென்னே?

## கேட்பன.

(பாரதியார்.)

> நல்லதோர் வீணை செய்தே—அதை
> நலங்கெடப் புழுதியி லெறிவதுண்டோ?
> சொல்லடி சிவசக்தி—எனைச்
> சுடர்மிகு மறிவுடன் படைத்து விட்டாய்.
> வல்லமை தாராயோ—இந்த
> மாநிலம் பயனுற வாழ்வதற்கே?
> சொல்லடி சிவசக்தி—நிலச்
> சுமையென வாழ்ந்திடப் புரிகுவையோ?
>
> விசையுறு பந்தினைப்போல்—உள்ளம்
> வேண்டியபடி செலும் உடல் கேட்டேன்.
> நசையறு மனங் கேட்டேன்—நித்தம்
> நவமெனச் சுடர்தரும் உயிர் கேட்டேன்.
> தசையினைத் தீ சுடினும்—சிவ
> சக்தியைப் பாடுநல் லகங் கேட்டேன்.
> அசைவறு மதிகேட்டேன்—இவை
> அருள்வதில் உனக்கெதுந் தடையுளதோ?

## ருசிகரமான சாட்சியம்.

பம்பாயில் நடைபெற்றுவரும் ஹார்வே நரிமன் வழக்கில் பம்பாய்க் கவர்ன்மெண்டு அபிவிருத்தி இலாக்காவில் முன்னர் சூபர்வைஸராக விருந்த ஜோஸப் புரூக்ஸ் என்பவர் சாக்ஷி கூறினர். அவர் கண்டிராக்டரிடம் தாம் லஞ்சம் வாங்கியதாகக் கூறினர். பிராஸிகியூஷன் தரப்பு வக்கீல் இவரைக் குறுக்கு விசாரணை செய்தபோது கசஉ௬-ம் வருஷம் மார்ச்சு அல்லது ஏப்ரல் மாதத்தில் உ00 ரூபாய் லஞ்சம் வாங்கியதுண்டென்றும், லஞ்சம் வாங்கியதற்காகத் தாம் வருந்தவில்லையென்றும், இதற்கு முன் இரண்டொருதரம் லஞ்சம் வாங்கி யிருப்பதாகவும் கூறினர்.

*வக்கீல்:*—தாங்கள் ஏன் லஞ்சம் வாங்கினீர்கள்?

*சாட்சி:*—மற்றவர்கள் லஞ்சம் வாங்கியதால் நானும் வாங்கினேன். என் எஜமானர்கள் வாங்கியபோது நான் ஏன் வாங்கக்கூடாது?

*வக்கீல்:*—இதுதான் தங்கள் நல்லொழுக்கமா?

*சாட்சி:*—ஆம். நான் அபிவிருத்தி இலாகாவில் உத்தியோகத்துக்கு வந்த பின் இதுதான் நல்லொழுக்கம் என நினைத்தேன். அதற்கு முன் இல்லை. மிஸ்டர் ஆண்டர்ஸன் என்ற ஒரு உத்தியோகஸ்தர், தம் சொந்த உபயோகத்திற்கு நிலக்கரி சப்ளை செய்யும்படி சீட்டு அனுப்புவதுண்டு. நானும் அனுப்பியிருக்கிறேன். ௫0 டன்னுக்கு அவர் சார்ஜ் கொடுக்க வேண்டும்.

*வக்கீல்:*—ஹெட் ஆபீஸுக்குத் தாங்கள் ஏன் இதைப்பற்றி அறிவிக்கவில்லை.?

*சாட்சி:*—அந்த ஆபீஸுக்கு இது நன்ருகத் தெரியும். எனது எஜமானர்களும் இப்படியே தங்கள் உபயோகத்துக்கு நிலக்கரி எடுத்துக்கொண்டு போவதுண்டு. இப்படி இருப்பதால் நான் யாரிடம் இதைப்பற்றி அறிவிப்பது? ஆபீஸர் பங்களாவில் வேலை செய்பவர்கள் பலரின் பெயர் டிபார்ட்மெண்டு வேலையாட்கள் ஜாப்தாவிலிருந்தது.

## காந்தி பேச்சு.

அரசப் பிரதிநிதியைக் காணச் சென்றபோது மகாத்மா ஒரு கதர் மூட்டையையும் கொண்டு சென்றராம். கதரைப்பற்றி அரசப்பிரதிநிதி நீண்ட நேரம் மகாத்மாவுடன் உரையாடினராம். இன்னும் அதைப்பற்றிப் பேசுவதாகவும் கூறியுள்ளாரென்றுந் தெரிகிறது. பரிசுத்தமான இயக்கத்தை எவர்தான் விரும்பா திருக்க முடியும்.

ஃ ஃ

அடிகளின் தமிழ்நாட்டு விஜயத்தின் போது சேலத்திற்குச் செல்லவில்லை. காரணம் சேலம் பட்டினத்தில் பார்ப்பனரல்லாதார் செல்வாக்கு அதிகமிருந்ததே காரணமாம். தமிழ் நாட்டில் மிக முக்கியமான தேசிய நகராக விளங்கும் சேலத்திற்கு மகாத்மாவைச் செல்லவிடாமற் செய்தது அநியாயமாகும். இதைப்பற்றிப் பல தலைவர்கள் கையொப்பமிட்டு அடிகட்கு ஒரு கடிதம் விடுத்திருக்கின்றனர்.

ஃ ஃ

மகாத்மா இதுபோது சிங்களத்துக்குச் சென்றிருக்கிருர். சிங்களநாடு செல்வம் மலிந்தது. செல்வம்பெற்ற பயனை யடையும் வழி அறஞ்செயலன்றே? வறியார்க்கொன்றீவதே ஈகையாதலால் கதருக்கு நிறைந்த பொருள் கொடுக்குமென்று நம்பலாம். நற்குறிகள் காண்கின்றன.

ஃ ஃ

காந்தியடிகள் ஏன் கதரை இவ்வளவு போற்றுகிறர்? அது ஏழைகளின் சஞ்சீவியாக இருக்கின்றது. ஏழை மக்கள் இந்தியாவில் எண்ணற்றிருக்கின்றனர். பட்டினங்களில் வசிக்கும் சிலர் தவிர மற்றவர் யாவரும் கிராமங்களிலேயே வசிக்கிறர். அவர்கட்குப் பணம் கிடைக்கும் வகையென்னவென்பதே அடிகளின் எண்ணமாகும்.

ஃ ஃ

ஏழைமக்கள் வீட்டிலிருந்தபடியே மரியாதையாகச் சிறிது பொருள் பெற்றுப் பிழைக்கும் வழி ராட்டினத்தால் கிடைக்குமென்பது அடிகளின் கருத்து.

ஃ ஃ

உணவும் உடையுமே மக்கட்கு வேண்டிய முக்கியப் பொருளாகும். உணவுக்குமேல் உடைதான் தேவை. அந்த உடைக்காக வருடந்தோறும் அறுபது கோடி ரூபா அயல்நாட்டுக்குப் போய்க் கொண்டிருக்கிறது. அவற்றை மறித்துத் திருப்பி ஏழைகள் வாழும் குடிசைக்கு அனுப்புவதே அடிகளின் கருத்து. இம் முயற்சியால் தேசத்திற்குண்டாகும் நலன் சொல்லி முடியுமோ?

ஃ ஃ

ஏழை மக்கட்குச் சோறு போடுவதும் மற்றத் தருமங்கள் செய்வதும் இவ்வளவு பெரும் உதவியை நல்க முடியாதன்றே? கதரியக்கத்தின் இவ்வுண்மையை மிகச் சிலரே அறிந்திருக்கின்றனர்.

ஃ ஃ

காந்திக்கு முன்னர் சில அடியார்கள் தோன்றினர்கள். அவர்களுடைய புகழ் தமிழ் நாட்டில்தான் பரவியது. என்றாலும் அவர்களை எல்லாரும் புகழ்ந்ததாகத் தெரியவில்லை. தமக்கு எதிரியாக இருந்தவர்களை வெட்டியும் கழுவேற்றியும் கொலைபுரிந்தனரென்று கதை யெழுதப்பட்டிருக்கிறது. மகாத்மா சரித்திரத்தில் பிறருக்குத் தீமை செய்த நிகழ்ச்சியே இல்லையென்பதை உணர்தல் அவசியமாகும்.

## பெஸண்டம்மையாரின் உபதேசம்.

அன்னிபெஸண்டம்மையார் வெளி நாடுகளில் சுற்றுப்பிரயாணம் செய்து விட்டுச் சென்னைக்குத் திரும்பியதும் அவர்களை உபசரிக்கும்பொருட்டு சென்னை கோகலே மண்டபத்தில் சில தினங்கள் முன் ஓர் கூட்டங் கூடியது. அக்கூட்டத்தில் பலர் பேசினர். அவற்றிற்கு விடையிறுக்குமுகத்தான் அம்மையார் நிகழ்த்திய விரிவுரையில் சில அரிய விஷயங்கள் அடங்கியுள்ளன. அவை வருமாறு:—

### ஒரு கட்சிதான் இருக்கலாம்.

இந்தியாவிலுள்ள கட்சிகளெல்லாம் ஒன்றுபடுமென நம்புகிறேன். ஏனெனில் தேசியக்கட்சி ஒன்றைத் தவிர இந்தியாவில் வேறு எக்கட்சியும் இருக்க நியாயமில்லை.

### நமது முன்னணிவேலை.

அயர்லாந்தின் ஜனத்தொகை ௫௦ லட்சமே. எனினும் அந்நாடு விடுதலை பெற்றுவிட்டது. இந்தியாவின் ஜனத்தொகையோ வெகு வெகு அதிகம். ஆனால் நம்முள் ஏற்பட்டுள்ள கட்சிகள் நம்மைப் பலவீனமாக்குகின்றன. ஆங்கிலேயர்கட்கு ஏதாவதொரு ஆபத்து வரின் அவர்களனைவரும் ஒன்றுகச் சேர்ந்துகொள்ளுகின்றனர். இதனை நாம ஆங்கில மக்களிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டாமா? ஒன்றுபட்ட ஜனங்களால் மட்டுமே விடுதலை பெற இயலுமென்பதையும், பல கட்சிகளாகப் பிரிந்து பிளவுற்றுக் கிடக்கும் சமூகத்தவரால் விடுதலைபெற முடியாதென்பதையும் நாம் உணர வேண்டாமா? இதுவேநமதுமுன்னணி வேலையாகும். தேசத்தின் விடுதலையைக் கவனிக்கையில் நமது சண்டைகளெல்லாம் எம்மாத்திரம்? ஓர் சமூகம் ஒன்றுபட்டு விடுதலையைக் கோருமாயின் அச்சமூகம் விடுதலை பெறுவதை உலகிலுள்ள எந்த சக்தியும் தடைசெய்ய வியலாது. ‘இந்தியா சுதந்திரம்பெற நினைத்துவிட்டால் அந்நாடு சுதந்திரம் அடைந்துவிடும்’ என்று மிஸ்டர் மாண்டேகு ஓர் தடவை கூறியது முற்றும் சரியே யாகும்.

### விடுதலைப்போர்.

இந்தியாவில் ஒற்றுமையே பெரிதும் தேவைப்படுகின்றது. அவ்வொற்றுமையை நாம் இலகுவாக அடைந்து விடலாம. நாம் எளிதில் சோர்வடைந்துவிடுகின்றோம். இது நமது குறையாகும். மனந்தளர்ந்துபோன பல இந்தியர்களை நான் சந்தித்திருக்கிறேன். போராட்டம் நிகழ்ந்துகொண்டிருக்கையில் நீங்கள் சோர்வடைதல் கூடாது. நீங்கள் நன்கு போராடும் நிலையிலிருக்கையில் சோர்வடையக் காரணமேயில்லை. வெற்றிக்கு மூயற்சிப்பதை நிறுத்துவதாலேயே தோல்வி ஏற்படுகின்றது. சந்தோஷமாகப் போராட வேண்டும். விடுதலைக்குப் போராடுவதைப்போல் மகிழ்ச்சி தரத்தக்கது வேறு ஏதேனும் உண்டா? இதற்கிணையானது உலகத்தில் வேறு ஏதும் இல்லை. அதைப்போல் ஊக்கந்தரத்தக்கதும் மகிழ்ச்சி தரத்தக்கதும் வேறு இல்லை. விடுதலைப்போரில் உயிர் துறப்பது அந்நியர் ஆதிக்கத்தில் அடிமைப்பட்டுழலுவதைக் காட்டிலும் எவ்வளவோ மேலாகும். நம் அனைவருக்கும் இவ்வுணர்ச்சி ஏற்படுமாயின் நாம் நிச்சயமாக வெற்றி பெறுவோம். தியாகத்தால் மட்டுமே அவ்வெற்றியை அடைய இயலும். நமது லோகாதய வருப்பங்களையும் பிறவற்றையும் தியாகம் செய்து விடுதலைபெறுவதை முன்னிட்டு நாமனைவரும் ஒன்றுபட வேண்டும். அவ்விடுதலையினைச் சுயராஜ்யம் என்றோ, சுயஆட்சி என்றோ அல்லது நீங்கள் விரும்பும வேறு எப்பெயர்கொண்டோ அழையுங்கள். அதன் பொருள் என்ன வென்பதை நாமனைவரும் நன்கறிவோம். அதாவது இந்தியா விடுதலை பெற்று, தனது விஷயங்களைத்தானே நிர்வகித்து, தனது வருங்கால நிலையினைத்தானே நிதானிக்குமென்பதேயாம். ஆங்கிலேயர்கட்குத் தேவைப்படுவன அனைத்தும் இங்கிலாந்திலேயே கிடைப்பதுபோல் இந்தியர்கட்குத் தேவைப்படுவன அனைத்தும்இந்தியாவிலேயேகிடைக்கவேண்டுமென நெடுங்காலத்திற்கு முன்னரே நான் கூறினேன். இதனை நாம் அனைவரும் குறியாகக்கொண்டு கருத்திலிருத்திப்பாடுபடுவோமாயின்உங்களில் பலர் கருதியிருப்பதற்கு நெடுங்காலத்திற்கு முன்னரே வெற்றிபெறுவோமென்பது திண்ணம்.

### மேனாட்டாரின் அறிவுப்போக்கு.

எனது சுய ஆட்சி மசோதாவை எப்படி வேண்டுமானாலும் சீர்திருத்துங்கள். அவசியமாயின் சுக்கல் சுக்கலாகத் தகர்த்து விடுங்கள். விடுதலைப் போராட்டத்தில் இவைகளெல்லாம் பொருட்படுத்தப்படக் கூடிய விஷயங்களல்ல. உங்களெல்லோரையும் ஒரே இனத்தவராகச்செய்து, சுதந்தர ஊக்கத்தை ஊட்டவும், உங்களது பிறப்புரிமைக்காக நீங்கள் போராடவும் என்னால் ஏதேனும் செய்யக்கூடுமாயின் அவ்வாறு செய்வதைக் காட்டிலும் எனது வாழ்க்கையில் எனக்குச் சந்தோஷம் தரத்தக்கது வேறு எதுவுமில்லை. ஏனெனில் இந்தியா விடுதலை பெற வேண்டும். அந்நாட்டின் நன்மையை மட்டும் முன்னிட்டல்ல, உலகத்தின் நன்மையை முன்னிட்டு இந்தியா விடுதலைபெற வேண்டும். ஏனெனில் உலகினுக்கு வேறெவ்வினத்தாலும் அளிக்கமுடியாத ஒன்றை இந்தியா அளிக்க வேண்டியிருக்கிறது. லோகாதயக் கொள்கையும், பூசல்களும் ஐரோப்பாவை உள்ளூர அரித்துவிட்டனவெனலாம். பூசல்கள் எதற்காக? ஏராளமான ஜனங்களை ஒரே நொடியில் எந்தவிதமான வெடிகுண்டு செய்து அழிப்பது என்பதைக் கண்டு பிடிப்பதற்காக! மேனாட்டு ஆராய்ச்சி முறை ஜீவனை அழிக்கக் கற்பிக்கின்றதேயன்றி ரட்சிக்கக் கற்பிக்கவில்லையென பாரதமாதாவின் அருந்தவப்புதல்வர்களுள் ஒருவரான ஸர் ஜகதீச சந்திர போஸ் கூறியிருக்கிறார்.

### ஒன்றுபடுவோம்.

எனவே, அன்பர்களே நாமனைவரும் ஒன்றுபடுவோமாக! நம்முள் சண்டைகள் வந்துவிடுமென ஒரு போதும் நினைக்காதிர்கள். இந்தியாவிலுள்ள பல்வேறு கட்சிகளும் நாட்டுக்கு எத்தகைய தொண்டு செய்திருக்கின்றன என்பதைமட்டும் கவனிப்போம். அபிப்பிராய பேதங்கள் தோன்றுவதற்குக் காரணமாக அவைகள் ஒவ்வொன்றும் என்ன செய்திருக்கின்றது எனச் சிந்தியாதிருப்போமாக! இந்தியாவிலுள்ள ஒவ்வொரு கட்சியும் இந்தியாவுக்கு ஏதோ ஒருவகையில் தொண்டு செய்திருக்கிறதென்பது உண்மை. எந்தத் திட்டத்திலும் எவரும் எளிதாகக் குற்றம் கண்டுபிடித்து விடமுடியும். ஒவ்வொரு கட்சியிலும் உள்ள நன்மைகளையும் தாய்நாட்டின் முன்னேற்றத்திற்கு அவைகள் செய்துள்ள ஊழியத்தையும் மட்டும் கவனிப்போம். சென்னைக் காங்கிரஸில் அனைவரும் ஒன்றுபட்டு நாம் கூடும் பொழுது சென்னைக் காங்கிரஸ் அனைவரும் ஒன்றுபட்ட காங்கிரஸாகத் திகழும். அக்காங்கிரஸ் கூறுவது இந்தியா முழுதும் ஒன்றுபட்டுக் கூறும் மொழிகளாக இருக்கும். அம்மொழிகளுக்கு இங்கிலாந்து செவிசாய்க்காமல் தீராது. அம்மொழிகள், விடுதலை பெற உறுதி கொண்டுள்ளதும் தனது பிறப்புரிமையைப் பெறுவதில் பிடிவாதமுள்ளதும், தனது வீட்டில் தான் எஜமானியாக இருக்கத் தீர்மானித்துள்ளதுமான ஒன்றுபட்ட ஓர் சமூகத்தின் மொழிகளாகவிருக்கும்.

## சிவநேசனின் விபரீதப் போக்கு.

சா. லெ. செ. செட்டியப்ப செட்டியார் எழுதுவது :—

நம் நாட்டில் இறைவன் கோயில்கள் பல இருக்கின்றன. அவற்றுள் மிகச் சிலவற்றில் தான் அவைகள் துறைகள் பரிசுத்தமாக இருக்கின்றன. மிகச் சிலவற்றில் தான் பூசை ஆராதனை முதலியன ஒழுங்கான முறையில் நடைபெறுகின்றன. பெரிய ஸ்தலங்களிலும் அக்கிரமச் செயல்கள் பெரும்பாலும் ஏராளமாக நடப்பது உண்மை. அதை இல்லை என்று மறுக்க எவராலும் முடியாது.

மகாத்மா காந்தி இந்த நாட்டுக்கு விஜயம் செய்த காலத்தில் “கோயில்களைப் பெரிதாகக் கட்டி சரியான பூசாரிகளையும் மானேஜ்மெண்டு செய்பவர்களையும் நியமிக்காததால் கோயில் காரியங்கள் ரொம்ப ஊழலாகக் நடக்கின்றன. ஆகவே சில கோவில்களைப் பார்க்கும்போது தாசி வீடுகளுக்கு அவைகள் சமமாக இருக்கின்றன” என்று சொன்னார். இதன் உண்மை என்ன? கோவில்களில் நடக்கக் கூடாத கெட்ட செயல்கள் எல்லாம் நடக்கின்றன என்பதன்றோ? அவர் அப்பொருள்கொண்டு சொன்னாரேயல்லாது கோவில்கள் எல்லாம் தாசி வீடுகள் என்று சொன்னாரில்லை. அவரிடத்தில் துவேஷம் கொண்டவர்களும் அவர் கூறிய வார்த்தைகளின் உண்மைப் பொருளை அறியும் ஆற்றல் இல்லாதவர்களும் அவ்வார்த்தைகளுக்குக் கெட்ட அர்த்தம் செய்திருக்கலாம். இனி ஆலயங்கள் நன்கு நடைபெற வேண்டுமென்ற எண்ணம் கொண்டு அவர் அவ்வாறு சொன்னாரேயன்றி கெட்ட எண்ணம் கொண்டாவது கடவுளிடம் வெறுப்புக் கொண்டாவது அவர் அவ்வாறு சொல்லவில்லை என்பது உண்மை. சரியான பூசாரிகளும் நிர்வாகஸ்தர்களும் கிடைக்காததால் அவசியமாக கட்டப்படவேண்டிய சில கோயில்களும் கூட இன்னுங் கட்டப்படாமலிருக்கின்றன என்று காணுடுகாத்தான் பிரசங்கத்தில் சொல்லியிருக்கிறார். அப்படிப்பட்ட மகாத்மாவை வாய்கொண்டமட்டும் திட்டியும், பேசியும், நால்வர்களுடைய அணுவிலும் அணுவாயுள்ள அவ்வளவு கூட போற்றக் கூடாத ஒரு மனிதனை மகாத்மா என்று சொல்வதா என்றும் இன்னும் பல விதமாக தூஷித்தும் அறிவு கெட்ட சிலர் எழுதிய குப்பைகளை அனுபவம் கொஞ்சமேனும் இல்லாத சிவநேசன் வெளியிட்டிருப்பதும் அவற்றை ஆதரித்து எழுதியிருப்பதும் எந்த நோக்கத்தோடு? அதனால் நன்மை அடையலாம் என்ற எண்ணமா?

நான் எல்லாப் புராணங்களையும் எல்லாப் பெரியார்களையும் அடியார்களையும் பொய் என்று சொல்லவில்லை. அவர்களையெல்லாம் கண்டவர்கள் யார்? அவர்களது செய்கைகள் என்னவென்று அறிந்தவர்கள் யார்? நான் சில தினங்களுக்கு முன் மதுரை மீனாட்சி அம்மனைத் தரிசிக்கும் பொருட்டு ஒரு சனிக்கிழமை காலையில் கூ-மணி சுமாருக்கு மதுரைக் கோயிலுக்குச் சென்றிருந்தேன். அப்போது ஒரு பட்டர் கடையில் தேங்காய் பழம் வெற்றிலை பாக்கு எல்லாம் வாங்கி வந்து சன்னிதிக்கு வெளியே ஒரு பக்கத்தில் வைத்து தேங்காயை உடைத்து வாழைப் பழங்களை ஒவ்வொன்றாக பிய்த்து நகத்தால் அமுக்கி தாம்பாளம் நிறையவைத்து ஒரு வேலைக்காரன் தலையில் வைத்து கொண்டு போய் அர்ச்சனை நடத்தும்படி கட்டளை வைத்த கனவான்கள் கடைகளில் கொடுத்தார். அக்கனவான்களுக்கு தங்கள் பட்டர் அம்பாளுக்கு அர்ச்சனை செய்து பிரசாதம் கொண்டுவந்து விட்டார் என்ற நம்பிக்கை உண்டு. அதற்குத் தகுந்த பலனும் உண்டு. ஆனால் உண்மையில் அர்ச்சனை செய்யாமல் மேற்கூறிய விதமாக நடந்துகொண்ட சண்டாளன் எக்கதியில் போவானோ? இப்படிப்பட்ட அக்கிரமங்களைப்பற்றித் தான் மகாத்மா காந்தி நல்ல பூசகர்கள் இல்லை என்றும் சரியானபடி பூசைகள் நடக்காததால் தெய்வம் கோவில்களில் இல்லை என்றும் கூறினார். ஒரு நாகசுரக்காரன் அபசுரமாய் வாசித்தால் கடவுள் ஓடிப்போய் விடுவார் என்று சொல்லுகிறார்கள் அல்லவா? அவ்வாறிருக்க ஈசுவரனைப் பூசிக்கக் கூடியவர்கள் வெத்திலை போட்டுக் கொண்டும், சரீர சுத்த மில்லாமலும் தெய்வத்தினிடம் பக்தி இல்லாமலும் பூசை செய்யுமிடங்களில் கடவுள் இருப்பாரா? பல கோயில் மடைப்பள்ளிகளில் பாத்திரங்கள் நன்கு சுத்தி செய்யப் படுவதில்லை. சில இடங்களில் முதல் நாள் சமைத்த பாத்திரங்கள் அப்படியே மறுநாள் சுத்தி செய்யாமல் உபயோகிக்கப் படுகின்றன. அங்கு வேலைசெய்கிற சில வேலைக்காரர்களும் வெத்திலை புகையிலை போட்டுக் கொண்டு அவற்றை மடைப்பள்ளிகளிலேயே ஓர் மூலையில் கத்தை கத்தையாக உமிழ்ந்து வைக்கின்றனர். சிலர் ஆராதனைக்குக் கொடுக்கும் அரிசி சாமான்களை எடுத்துக் கொண்டு, சரியாகத் தளிகை செய்து சுவாமிக்கு ஆராதனை செய்வதில்லை. அரிசி முதலிய நைவேத்திய சாமான்களைத் திருடிக் கொண்டு வீட்டில் சேர்த்து விட்டு செங்கலைச் சுட்டுத் துணியைப்போட்டு மூடி சுவாமிக்கு ஆராதனை செய்யும் சண்டாளர்களு முண்டு. நல்ல குலத்தில் பிறந்த ஒருவன் ஒருவருஷத்துக்கு மேல் ஓர் மகமதியர் வீட்டில் தங்கியிருந்தான். அங்கேயே சாப்பாடுமுதலியன வைத்துக் கொண்டிருந்தானும். அவன் செய்த கெட்டகாரியங்கள் கணக்கிலடங்காது என்று சொல்லப் படுகிறது. அப்படிப்பட்ட சண்டாளனுக்கு பெரிய க்ஷேத்திர மென்று கருதப்படும் ஒரு கோவிலில் தீர்த்தம் முதலிய மரியாதைகள் நடக்கிறதென்றால் இவ்வக்கிரமத்தை என்ன சொல்லுவது? இப்படியெல்லாம் அக்கிரமங்கள் செய்வோர்களால் கடவுள் கோவிலிலிருந்து ஓடிவிடமாட்டாரா?

இவ்வக்கிரமங்களை யெல்லாம் எடுத்துக் கூறும் மகான்களை வாய்க்கு வந்தபடி திட்டினால் அதனால் அவர்களுக்கு எவ்வித திங்கும் வந்துவிடாது. ஒரு யாககுண்டத்தில் ஒரு புழுவிழுந்து நெளிந்து ஜோதி மயமான அந்த நெருப்பை அழிக்க வேண்டுமென்று எண்ணினால் முடியுமா? அந்த புழுதான் எரிந்து சாம்பலாய்ப்போகும். இப்படித்தான் உண்மையில் பெரியவர்களாயிருப்பவர்களைத் திட்டுபவர்களின் நிலையுமாகும்.

மகாத்மா காந்தியை உலகம் முழுதும் போற்றுகின்றது. அரசாங்கத்தாரும் அவருக்கு அதிக மதிப்புக் கொடுத்திருக்கின்றனர். எல்லோராலும் போற்றப்படும் மகாத்மாவை விரிந்த அறிவும் அனுபவமும் இல்லாத சிவநேசன் பத்திரிபரும் மற்றும்அவர் போன்ற சிலரும் திட்டி எழுதுவதால் ஒன்றும் கேடுவந்து விடப்போவதில்லை யென்பதையும் அவ்வாறு செய்வதனால் அவர்களுக்குத்தான் இழிவு ஏற்படுமென்பதையும் அவர்கள் அறிவார்களாக!



## இங்கிலாந்தின் வேஷம்.

இந்திய ஜனங்களை சுய ஆட்சி முறையில் பயிற்சி செய்து வருவதாகவும், இந்தியர்கள் தன்னாட்சிக்குத் தகுதியுடையவர்களானதும் இந்திய அரசியலை அவர்களிடம் ஒப்புவிப்பதே தங்களது நோக்கமென்றும் பிரிட்டிஷ் அரசியல் வாதிகள் கூறிவருவதை அனைவரும் அறிவர். அவர்கள் கூறுவது பகல் வேஷமேயன்றி வேறல்ல. ஓர் இனத்தவர் மற்றோர் இனத்தவரைத் தன்னாட்சி முறையில் பழக்க முடியாதென்பதும், அவர்கள் தாமே அனுபவத்தின் பயனாகத் தகுதியுடையவர்களாக முடியுமென்பதும் உலகப் பெரியார்களின் கருத்தாகும். இவ்வுண்மையினைக் கூறியிருக்கும் சில அரசியல் வல்லுனர்களினுடையவும், ஆராய்ச்சி வல்லுனர்களினுடையவும் கருத்துக்களைக் கீழே தருகின்றோம்.

### மேக்காலே.

இவர் நுண்ணிய அறிவு வாய்ந்த ஆங்கில அரசியல் வாதி. இவர் வெகு காலத்திற்கு முன்னரே பின்வருமாறு கூறியிருக்கின்றார்:—

சுதந்திரத்தைச் சரியாக உபயோகிக்கத் தகுதியுடையவர்களாகும் வரை எவ்வினத்தவரும் சுதந்திரமடையலாகாதென்று நம் காலத்திலுள்ள பல அரசியல் வாதிகள் கூறிவருவது வழக்கமாயிருக்கின்றது. நீந்தத் தெரியாமல் தண்ணீரண்டையில் செல்லலாகாதெனக் கூறிய முட்டாளின் கதையை மேற்கூறிய கூற்று ஒக்குமேயன்றி வேறல்ல. அறிஞர்களாகவும், நல்ல அடிமைகளாகவும் ஆகும்வரை சுயேச்சை பெறுவதற்கு மனிதர்கள் காத்திருக்க வேண்டுமாயின் அவர்கள் எக்காலத்திலும் காத்துக்கொண்டிருக்க வேண்டுவதுதான்.

### ஜான் மார்லி.

இவர் ௧௯௦௫-முதல் ௧௯௧௦ வரை இந்தியா மந்திரி பதவி வகித்து வந்தார். பல நூல்கள் இயற்றியுள்ளார். சிறந்த ராஜ தந்திரி. பல பத்திரிகைகளுக்கு ஆசிரியராக இருந்திருக்கிறார். இவர் ஆங்கில நாட்டு முதல் மந்திரியாயிருந்த கிளாட்ஸ்டன் என்பாரது ஜீவிய சரித்திரம் எழுதியுள்ளார். அதில் ஓரிடத்தில் அவர் கூறுவதாவது:—

சிறுகுழந்தைகளைமெதுவாகபடிப்படியாக நடக்கவும், துணிகள் அணியவும் பழக்குவது போல புதிய இனத்தவர்களை சுய ஆட்சி முறையில் பயிற்சி செய்வதாகக் கூறப்படும் பொய் வாதங்களைக் கண்டிக்க எக்காலத்திலும் அவர் பின் வாங்கியதில்லை. கொடுங்கோலர்களது ஆதிக்கத்தில் இவர்கள் வைக்கப் பெற்றிருக்கும் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு ஆண்டும், அவர்களை மென்மேலும் சுய ஆட்சி ஸ்தாபனங்களுக்குத் தகுதியற்றவர்களாக்கிக் கொண்டிருக்கின்றனவென்பதே உண்மையாகும். மனிதர்களைச் சுதந்திரத்திற்குத் தகுதியுள்ளவர்களாக்குவது சுதந்திரமேயாகும். அரசியல் விஷயங்களில் மற்றவைகளுக் கிருப்பது போல் இந்த யோசனைக்கும் ஓர் அளவுண்டு. ஆனால் ‘தகுதியுடையவர்களாகும் வரை காத்திருக்கவேண்டும்’ என்று கூறும் யோசனையைக் காட்டிலும் மேலே விளக்கப்பட்ட யோசனை எவ்வளவோ மேலானதாகும்.

### ஆசிரியர் பிரடரிக் ஸ்டார்.

இவர் அமெரிக்க நாட்டைச் சேர்ந்த தோர் மா பெரும் பண்டிதர். கீழ்நாட்டவர்களைப்பற்றியும், அவர்களது அரசியல் ஸ்தாபனங்களைப்பற்றியும், அவர்களது தற்போதைய நிலையினைப்பற்றியும் இவரைப் போல் நன்கு அறிந்திருக்கும் அமெரிக்கர் வேறு எவரும் இல்லையென்று திண்ணமாகக் கூறலாம். அவர் கூறுவதைச் சிறிது கவனிப்போம்:—

ஓர்சமூகத்தாராது பொருளாதார நிலையினை நன் நிலைக்குக் கொண்டுவரத் தக்கவாறு அமைக்கப்பட்டு அச் சமூகத்தவராலேயே நிர்வகிக்கப்பட்டுவரும் அரசாங்கம் அவர்கள் மீது புகுத்தப்பெற்றுள்ள எத்தகைய பூரணமான அரசாங்கத்தைக்காட்டிலும் மேலானதாகும். இந்தியாவின் நலனுக்காக இங்கிலாந்து செய்து வருவனவற்றைக் காட்டிலும் பிலிப்பைன் தீவுகளின் நலனை நாடி அமெரிக்கா எவ்வளவோ அதிகமாகச் செய்துவருகின்றதென்னலாம். என்றாலும் நாம் அத்தீவுகளில் இருந்துவரும் ஒவ்வொரு தினமும் பிலிப்பைன் ஜனங்களைத் தன்னாட்சிக்குத் தகுதியற்றவர்களாக்கிவருகின்றதென்பதே எனது அபிப்பிராயம்.

### கார்ல் ஷுர்ஸ்.

இப்பெரியார் ஜெர்மானிய அமெரிக்க ராஜ தந்திரியாவார். அமெரிக்க உள்நாட்டுக் கலகம் நிகழ்ந்த காலத்தில் ஓர் சைன்ய தளகர்த்தாராக இருந்து வந்தார். மந்திராலோசனை சபை அங்கத்தவராகவும் சிறிது காலம் இருந்து வந்திருக்கிறார். பிரபல அரசியல் வாதி. கீழ்நாட்டவர்களிடம் இவருக்கு மிகுந்த பழக்கமுண்டு. இவர் தனது ஞாபகக் குறிப்புக்களில் ஓரிடத்தில் குறிப்பிடுவதாவது:—

தன்னாட்சி முறையில் நேரான அனுபவப் பயிற்சி பெறுவது மனிதர்கட்கு எத்தகைய கல்வியைப் போதிக்கின்றதென்பதை நான் கவனித்து உண்மையறிந்தது எனது வாழ்நாள் அனுபவங்களுள் முக்கியமானதொன்றும்.

முதன் முதலாகத் தன்னாட்சி முறையைத் துவக்குவோர் துவக்கத்தில் பல பெருந் தவறுகள் இழைத்தல் கூடும். ஆயினும் விரும்பத்தகாத மகத்தான கெடுதல்களைத் தோற்றுவிக்கும் இத்தவறுகள் அவர்களது அறிவைத்தெளிவாக்கப்பயன்படும்.சிறந்ததன்னாட்சிப்போதனைதன்னாட்சிப்பொறுப்பை வகித்து அனுபவத்தில் தன்னாட்சி நடத்துவதேயன்றி வேறல்ல. தன்னாட்சி முறையென்பது மற்றைய நாட்டவர்களது அனுபவங்களைப்படிப்பதால் அறிந்து கொள்ளக்கூடிய ஒன்றல்ல. அனுபவமே உண்மையான பயன் தரத்தக்க ஆசிரியராகும். ஏனைய பயிற்சி முறைகள் தன்னாட்சித் திறமை பெறுவதைத் தடைப்படுத்தும். ஏனெனில் அவைகள் தன்னம்பிக்கைக் கொள்கையையும், பொறுப்பை உணரும் தன்மையையும் அகற்றிவிடும். இதனாலே தான், தகுதி பெறுதவரை தன்னாட்சி நல்கலாகாதெனும் கொள்கையினை ஆதாரமாகக் கொண்டு ஆதிக்கம் வகிக்கும் இனத்தாரால் போதிக்கப்பட்ட எந்த சமூகமும் தன்னாட்சி முறையில் தன்னாட்சிக்குத் தகுதி பெற்றதாக சரித்திரங்களில் காணோம்.

### சார்லஸ் பிரான்ஸிஸ் ஆடம்ஸ்.

இவர் அமெரிக்காவைச் சேர்ந்தவர். மாபெரும் பண்டிதர். பிரபல சரித்திராசிரியர். ௧௯௦௩-ம் ஆண்டில் அமெரிக்க சரித்திர ஆராய்ச்சி சங்கத்தில் பேசுகையில் இவர் குறிப்பிட்டதாவது:—

அடிமைப்பட்டுக் கிடக்கும் எந்த சமூகமும் பிறர் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருப்பதன் மூலமாக தன் பழயநிலையினின்றும் எவ்வகையிலாவது மேம்பட்டதாகவாவது, தன்னாட்சி பெற்றதாகவாவது தன்னாட்சி முறையில் அனுபவம் பெற்றதாகவாவது ஆதிகாலம்முதல் இதுவரைஎழுதப்பட்டுள்ள எந்த தேசசரித்திரத்திலும் காணப்படவில்லை யென்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். மற்றோர் அரசாங்கத்தின் கீழ் இருக்கும் நிலை, சொந்த இனத்தவர்களால் ஆளப்படும் இனத்தவர்களையுங்கூட நாளடைவில் கேவலமான நிலைக்குக் கொண்டுவந்து நசித்துப்போகும்படி செய்துவிடுமென்பதில் ஐயமில்லை. பெரும்பாலும் இவ்வாறேதான் இருந்துவருகின்றதென்பதை நான் நன்கு நிரூபித்துக்காட்ட முடியும். விடுதலை பெறுவதாலும் தன்னாட்சி நடத்துவதாலும் அனுபவத்தாலும் தவறுகள் இழைத்து அதன்மூலம் அறிவு வளர்ச்சி பெறுவதால் மட்டுமே தன்னாட்சி செலுத்தும் திறமையைப்பெறவியலும். அத்திறமை அவ்வாறேதான் கடந்த காலங்களில் பெறப்பட்டு வந்திருக்கிறது.

பிரிட்டிஷ் ஆட்சி இந்தியர்களின் தன்னாட்சித் திறமையைக் குறைத்துவிட்டதென்றும், பிரிட்டிஷாரது ஆதிக்கம் இந்தியாவிலிருந்துவரும் வரை இந்தியர்கள் அந்நிலை அடையப்போவதில்லை யென்றும் கூறியிருக்கிறார்.

## எதிரொலி.

### அடுத்த உலகப்போர்.

ஸ்ரீமான் தனகோபால் முக்கர்ஜி அவர்கள் ‘பார்வேர்ட்’ பத்திரிகையின் ஆண்டு மடலில், அடுத்துவரப் போகின்ற உலக யுத்தத்தைப் பற்றி அரியதோர் கட்டுரை வரைந்துள்ளார். அதில் அவர் குறிப்பிடுவதாவது:—

தற்பொழுது ஐரோப்பாக் கண்டத்திலுள்ள அரசியல் ஸ்தாபனங்களெல்லாம் தம் நாடுகளிலுள்ள ஜனங்களை,கசாப்புக் கடைக்காரன் ஆடுகளையும் பசுக்களையும் வதைக்க ஓட்டிச் செல்வது போல், உலகப் போருக்குச் செலுத்திக் கொண்டிருக்கின்றனர். மனிதவருக்கத்திடம் அனுதாபங் கொண்டுள்ளவர்கள், பிரஸ்தாப அரசியல் வாதிகளின் தலைகீழான போக்கைத் தடைசெய்ய முற்படவில்லையாயின் உலகிலுள்ள வேறு எந்த சக்தியும் நேரவிருக்கும் பெரும் விபத்தைத் தடைசெய்ய முடியாது. இதனை விளக்கப் புள்ளி விவரங்கள் எடுத்துக்காட்ட வேண்டிய அவசியமில்லை. ஓர் புலி சைவம் பிடிக்கப் பெரிதும் முயலுவதாக ஆடம்பரம் செய்வது போலவே தான் மேனாட்டு அரசாங்கங்கள் சமாதானத்தைப் பெரிதும் விரும்புவதாகக் கூறிவருவதுமாகும்.

ஃ ஃ

### ஓர் அரசரது ஆடம்பரம்.

காலஞ்சென்ற கம்போடியா (இண்டோ சைனாவில் இப் பிரதேசம் இருக்கின்றது) அரசரான விஸோவட் என்பவரது பாரிஸ் விஜயத்தைப்பற்றி ‘லிட்டாரி டைஜெஸ்ட்’ எனும் பத்திரிகையில் கீழ்காணுமாறு வரையப் பெற்றுள்ளது:—

புராதன ஆசியாமன்னர்களுக்குரிய ஆடம்பரத்துடன் கம்போடியா மன்னர்வந்து சேர்ந்தார். அவரும் அவரது பரிவாரங்களும் அணிந்திருந்த நகைகளின் மதிப்பு ௬௦௦,௦௦௦,௦௦௦ பிராங்குகளாகும். இவ்வாபரணங்கள் அணிந்திருப்பவர்களைப் பாதுகாப்பதற்காக பிரான்ஸிலுள்ள போலீஸார் தங்களது இதர வேலைகளை யெல்லாம் நிறுத்தி விட்டனர்.

பிரசித்திபெற்ற கம்போடியா நாட்டு வாளையும் அவ்வரசர் கொண்டுவந்திருந்தார். அவ்வாள் ௫௦௦௦ ஆண்டுகளாக இருந்து வருகின்றது. அதில் ௨௦௦௦௦௦௦௦ டாலர்கள் பெறுமதியுள்ள நவரத்னங்கள் பதிக்கப் பெற்றிருந்தன. அதனைக்காத்துவந்த மூவர்களைப்பற்றியும் பலவிதமான கதைகள் சொல்லப்பட்டுவந்தன.

அரசருடன் ௪௦௦ நாட்டியப் பெண்கள் வந்திருந்தனர். அவர்களனைவரும் நவரத்தினங்களால் பொதியப் பெற்றிருந்தனர் என்று கூறுவது மிகையாகாது. அவர்களைப் பார்த்தவர்கள், அவ்வரசன் அவர்கள் உயிருள்ள ஆபரணங்கள் என்று கூறுவதை மனமார ஆமோதிப்பார்கள்.

நாட்டிய காலத்தில் அவர்கள் அணியும் உடைகள் விலையேறப்பெற்றவை. அவற்றின் வனப்பை வர்ணித்து முடியாது. அவ்வாடைகள் பெரும்பாலும் தங்க நூல்களால் ஆக்கப்பெற்றிருந்தன வென்றே சொல்லவேண்டும். பிரஞ்சுக் குடியரசுத் தலைவர் பாலியர்ஸும் அவரது மனைவியும் மிகுந்த தெய்வ பக்தியுள்ளவர்கள். தங்கள் முன் அப்பெண்கள் வர அனுமதிக்க துவக்கத்தில் அவர்கள் தயங்கினர். அவர்களைக் கண்டதும் தாங்கள் துவக்கத்தில் தயங்கியதற்குத் தக்க ஆதாரங்களில்லை யென அவர்களே கூறினர்.

அத்தகைய அபூர்வ உடைதரித்திருந்ததுடன் கிறிஸ்து பிறப்பதற்கு ஆயிரம் ஆண்டுகட்கு முன்னருள்ள நாகரிக முறைப்படி நவரத்தினங்கள் பதிக்கப்பெற்ற தலைக்கவசத்தையும் அவர்கள் ஒவ்வொருவரும் அணிந்திருந்தனர்.

ஃ ஃ

### கல்கத்தாவில் மதுபானம்.

‘ஆப்காரி’ பத்திரிகையில் பின்வரும் விவரம் காணப்படுகின்றது:—

௧௯௨௬-ஏப்ரல் முதல் ௧௯௨௭-மார்ச் முடிய உள்ள ஒருவருஷகாலத்தில் கல்கத்தா வாசிகள் (ஹௌரா உள்பட) கீழ்காணும் அளவு மதுவகைகள் அருந்தியிருக்கின்றனர்:-

| | | |
|---|---|---|
| நாட்டுச் சாராயம் | ௨௮௦,௦௦௦ | காலன்கள் |
| அந்நிய நாட்டுக் குடிவகைகள் | ௧௪௦௦௦௦ | கலன்கள் |
| ஒயின் | ௯௬௦௦௦ | ” |
| பீர் | ௯௦௦௦௦௦ | ” |
| வைத்திய சம்பந்தமான ஒயின்கள் | ௭௦௦௦ | ” |

மொத்தம் ஏழேகால் லட்சம் கலன் குடிவகைகள் அருந்தியிருக்கின்றனர். கள் விவரம் குறிக்கப்படவில்லை. கள் விற்பவர்கள் தங்கள் விற்பனைக்குக் கணக்குவைத்துக் சொன்ன வேண்டிய அவசியமில்லை. ஆனால் இதே காலத்தில் ௬௦௦௦௦ மணங்குகள் செலவாகியிருக்கிறதென்று மதிப்பிடப் படுகிறது.

வங்காளத்தில் மதுபானம் பெரிதும் குறைவென்று சொல்லலாம். எனினும் பன்னிரெண்டரை லட்சம் ஜனங்களுள்ள கல்கத்தாவில் மூன்று லட்சம் கலன் நாட்டுச் சாராயம் செலவாகின்றது. அம் மாகாணத்தின் மொத்த ஜனத்தொகை நான்கு கோடியாகும். அம் மாகாணம் முழுதுக்கும் மொத்தம் எட்டு லட்சம் கலன்தான் செலவாகிறது. கலால் வருமான விஷயத்தில் கல்கத்தாமட்டும் ஐம்பத்தைந்து லட்சம் ரூபாய் வரியாகக் கொடுக்கிறது. அம் மாகாணத்தின் மொத்த வருமானம் நூற்றிருபத்தெட்டு லட்சம், கல்கத்தாவில் ஐரோப்பியர்களும் ஆங்கிலோ இந்தியர்களும் வங்காளிகளல்லாதவர்களும் ஏராளமாக இருப்பதே இவ்வித நிலைக்குக் காரணமென்று ரெவரண்டு ஹார்பர்ட் ஆண்டர்ஸன் கூறுகிறார்.

ஃ ஃ

### ஜப்பானில் பல் வைத்தியம்.

‘இந்தியன் டென்டல் ரெவியூ’எனும் சஞ்சிகையில் காணப்படுவதாவது:—

இவ்வளவு குறுகிய காலத்திற்குள் ஜப்பான் பல் வைத்தியத்தில் அடைந்துள்ள முன்னேற்றம் ஆச்சரியத்திற்குரியதாகும். தற்பொழுது ௧௦௦௦௦ ஜப்பானிய பல் வைத்தியர்களுக் கதிகமாக இருக்கின்றனரென்று மதிப்பிடப்படுகிறது. அவர்கள் உலகின் பல பாகங்களிலும் தொழில் நடத்தி வருகின்றனர். உள் நாட்டு இலாகாவின் மேல்பார்வையில் பல் வைத்திய கலாசாலைகள் ௯ நடைபெற்று வருகின்றன. அவற்றிலிருந்து ஒவ்வோராண்டும் ௯௦௦ வைத்தியர்கள் வெளியேறுகின்றனர். பெண்களுக்கெனத் தனியாக இரண்டு கலாசாலைகள் இருக்கின்றன. அந்நாட்டினின்றும் பல் வைத்தியம் சம்பந்தமாக ௧௫ பத்திரிகைகள் வெளிவருகின்றன.

## அயலகம்.

ககஉசு-ம் வருஷத்திய நோபல் இலக்கியப்பரிசு பல நவீனங்கள் இயற்றியுள்ள கிரேஸியாடி லெட்டா என்னும் இதாலிய மாதுக்கு வழங்கப் பெற்றிருக்கிறது.

ஃ ஃ

கொழும்பு துறைமுகக் கணக்கில் ரூபாய் உ0000 மோசடி நடந்திருப்பதாகவும் ரகசியப் போலீசார் விசாரித்துவருகின்றனரென்றும் செய்தியெட்டுகிறது.

ஃ ஃ

இங்கிலாந்தில் கஅககு-ம் வருஷத்திற்குப் பிறகு முதல் தடவையாக வருகிற டிசம்பர் மாதம் முதல் தேதி புதிய நாணயங்கள் வெளியிடப்படும் எனத் தெரிகிறது.

ஃ ஃ

ஸோவியத் குடியரசு தினக் கொண்டாட்டத்தை முன்னிட்டு ஜப்பானில் கூட்டப்பட்ட கூட்டத்தைக் கலைத்து விட்டு உஎ-பேர்களை போலீசார் கைது செய்திருக்கிறார்களாம்.

ஃ ஃ

மோகுல் தேசத்து ஐந்து பெரிய எண்ணெய்க் கம்பெனிகள் மத்தியதரைக் கடலுக்கு ஐந்நூறு மைல்கள் நீளமுள்ள எண்ணெய்க் குழாய்கள் போடுவதாகத் தீர்மானித்திருக்கின்றன.

ஃ ஃ

அமெரிக்காவில் பெல்வியரில் ஏற்பட்ட வெள்ளத்தால் எ000- பேர்கள் வரை வீடு வாசல்களை இழந்து தவிக்கின்றார்களென்றும், ௯0-அடித் தண்ணீர் வரை வீதிகளில் ஓடினவென்றும், சிலர் மாண்டனர் என்றும் ஒரு செய்தி கூறுகிறது.

ஃ ஃ

சமீபத்தில் ஷாங்கேயில் சோவியத் கான்ஸலேட் காரியாலயத்தில் மூன்னூறு ருஷியர்கள் துக்க உடைதரித்துப் புகுந்து சூறையாடினார்கள். உள்ளேயிருந்தவர்களைத் துப்பாக்கி கொண்டு சுட்டார்கள். ஒருவர் கொல்லப்பட்டார்.

ஃ ஃ

மானிடர் குரல் கேட்டு அவர்கள் கட்டளையிடுவதுபோல் நடக்கத்தக்க 'இயந்திர மனிதன்' என்னும் ஒருவகை புது நூதனமான இயந்திரமொன்றை சமீபத்தில் நியூயார்க் நகரில் ஒரு மின்சாரக் கம்பெனியார் வேலை செய்து காட்டினார்களாம்.

ஃ ஃ

டாக்டர் டொரதி லோகன் என்ற வெள்ளைப் பெண் தான் இங்கிலீஷ் கால்வாயைத் தாண்டி விட்டதாகப் பொய் சொல்லி ஏமாற்றியதற்காக லண்டன் லார்டு மேயரால் க00-பவுன் அபராதம் விதிக்கப்பட்டாள்.

ஃ ஃ

கிழக்கு ஆப்பிரிக்கா கமிஷனில் இந்தியர் இல்லாவிடில் யூனியனிலுள்ள இந்தியர்கள் கமிஷன் அங்கு வரும்போது கறுப்புக்கொடி போட்டு கமிஷனைப் பகிஷ்கரித்துவிட்டு அதனுடன் சிறிதும் ஒத்துழைப்பதில்லையென்று முடிவுசெய்திருக்கின்றனர் என ஒரு செய்தி எட்டுகிறது.

ஃ ஃ

இந்தியத் தொழிலாளர் காங்கிரஸ் கூட்டத்திற்கு பிரிட்டிஷ் தொழில் காங்கிரஸ் நிர்வாக சபையின் பிரதிநிதிகளான மிஸ்டர் பர்ஸலும் மிஸ்டர் கால்வி வொர்த்தும் நவம்பர் மாதம் க0-ந் தேதி இந்தியாவிற்குப் பிரயாணமாயினர் என ஒரு செய்தி கூறுகிறது.

ஃ ஃ

ஷாங்கையில் புதிதாக ஒரு தொழிலாளர் சங்கத்தை ஸ்தாபிக்கப் பல ஆண்கள், பெண்கள், குழந்தைகள் உள்பட நூற்றுக் கணக்கான தொழிலாளர்கள் ஒரு சினிமாக் கட்டிட மூன்றாவது மாடியில் ஒரு கூட்டம் நடத்திக்கொண்டிருக்கும்போது திடீரென மாடி இடிந்து விழுந்ததால் பலர் மாண்டனர் என ஒரு செய்தி எட்டுகிறது.

ஃ ஃ

லண்டன் கேம்பிரிட்ஜ் சர்வ கலாசாலையில், ஐக்கிய மாகாணச் சட்ட சபை அங்கத்தினரான ஜனாப் ஷபாத் அஹமத்கான் ககு-வது நூற்றாண்டின் பிரச்னைகள் (இந்திய சரித்திரம்) என்ற விஷயமாக ஒரு பிரசங்கம் செய்தார். கேம்பிரிட்ஜில் முதன் முதலாக இப்போதுதான் ஒரு இந்தியர் பிரசங்கம் செய்ய அழைக்கப்பட்டிருக்கிறார்.

## தாயகம்.

காரக்பூரில் ரயில்வேத் தொழிலாளர்களுக்கும் ரயில்வே கம்பேனியாருக்கும் ராஜி ஏற்பட்டுவிட்டதாம்.

ஃ ஃ

நேபாள மகாராஜா பிரதம மந்திரி சுகிதம் டிசம்பர் மாதம் உகு-ந்தேதி கல்கத்தா வந்து சேருவார். இராஜப்பிரதிநிதியையும் அவர் கண்டு பேசுவார் எனத் தெரிகிறது.

ஃ ஃ

நாகபுரி முனிசிபாலிடியார் ஸ்ரீ திலகர் உருவச் சிலைக்கு ஆயிரம் ரூபாய் கொடுப்பதென்று ஏக மனதாகத் தீர்மானித்திருக்கிறார்கள்.

ஃ ஃ

இரண்டு சேவகர்கள் தங்கள் கடமையைச் செய்து கொண்டிருக்கையில் வோர் செஸ்டர் பட்டாளத்தைச் சேர்ந்த சோல்ஜர்கள் அடித்ததாக அலகாபாத் கோர்ட்டில் ஓர் வழக்கு விசாரணையிலிருந்து வருகிறது.

ஃ ஃ

டில்லியில் பாண்டுவாத்தியம் வாசித்துக்கொண்டு சென்ற ஹிந்துக்கலியாண ஊர்வலமொன்றைத்தடுத்து நிறுத்தியதாகப் பத்து முஸ்லிம்கள் கைதுசெய்யப்பட்டிருக்கிறார்களாம்.

ஃ ஃ

ராஜத்துவேஷத்திற்காக சு-மாதம் சிறைவாச தண்டனை விதிக்கப்பட்ட காங்கிரஸ் ஊழியர் மௌல்வி ஜலாலுதீன் ஹிஸமி சில தினங்கள் முன் மிதுனபுரி சிறையிலிருந்து விடுதலைசெய்யப்பட்டார்.

ஃ ஃ

சில தினங்கள் முன் கொல்லங்கோடுக்கடுத்த பட்டி நகரத்தாராவிற்கு அருகில் கசு வயதுள்ள ஒரு பெண்மீது ஒரு மோட்டார் ஏறியதால் ஷை பெண் இறந்துபோனாள் என்று ஒரு செய்தி கூறுகிறது.

ஃ ஃ

மலேரியா வியாதியில் நிபுணரான சர் ரோலந்து ராஸ் மலேரியாவைப்பற்றி யோசனை அளிப்பதற்காக க0-நாள் தங்கி யிருப்பதற்குரூ ௬ரு00 கொடுப்பதாக பம்பாய்கார்ப்பொரேஷன் தீர்மானித்திருக்கிறதாம்.

ஃ ஃ

சாட்டர் பால சிங் எனும் கொள்ளைக்காரன், தான் ௪000ரூபாய் கிஸ்தி செலுத்துபவனென்றும், சில கொள்ளைக்கூட்டத்தில் தான் சேர்ந்து கொள்ளையிட்டதாயும் அலகாபாத் கோர்ட்டில் மாஜிஸ்திரேட் முன்பாகக் கூறினனும்.

ஃ ஃ

இரங்கூன் மொகல் வீதி கசு-ம் நம்பர் கட்டிடத்தில் வைரவியாபாரஞ் செய்யும் ஈராஜ்மால் லல்லுபாய் கம்பெனியில் ௬ இந்தியர்கள் உரு00 ரூபாய் மதிப்புள்ள வைரப் பொட்டலமொன்றைத் திருடிச் சென்றதாகச் சொல்லப்படுகிறது.

ஃ ஃ

பம்பாய் மாகாண முஸ்லிம் சுன்னி மகாநாட்டில் இந்திய முஸல்மான்கள் கமிஷனைப் பஹிஷ்கரிக்கக் கூடாதென்றும், முஸ்லிம்களின் கோரிக்கையை அவர்கள் கமிஷன் முன் எடுத்துச் சொல்லவேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

ஃ ஃ

அலகாபாத்தில் பண்டித எஸ். மாளவியாவின் உறவினர்கள் ஜாதிக்கட்டுப்பாடு செய்து அவரை அவமானப் படுத்தியதாகத் தொடுத்திருந்த வழக்கில் வாதி பண்டித எஸ். மாளவியாவுக்கு பிரதிவாதிகள் ௯00 ரூபாய் கொடுக்க வேண்டுமென முனிசிப் தீர்ப்புச்சொல்லியிருக்கிறார்.

ஃ ஃ

அரிசி மூட்டை ஏற்றிச் சென்ற ஒரு சிறு கப்பலைக் கவிழ்க்க வந்த ௬௪ அடி நீளமும் ௬௪ அடி அகலமும் உள்ள ஒரு திமிங்கலம் ஷை சப்பல் மாலுமிகளால் சுட்டுக் கொல்லப்பட்டு கொச்சி சமஸ்தானம் சேரை என்ற கடற்கரை யோரமாக மிதந்து வந்து சேர்ந்திருக்கிறதாம்.

ஃ ஃ

கல்கத்தாவைச் சேர்ந்த உச பரகாணங்களைச் சேர்ந்த ஒரு கிராமத்தில் நிலசம்பந்தமாக ஏற்பட்ட ஓர் தகராறு காரணமாக சிறிது காலத்திற்கு முன்னர் ௫ பேர்களடங்கிய ஒரு குடும்பத்தையே ஆறு முகமதியர்கள் கொலை செய்ததற்காக அவர்களுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்பெற்றிருக்கிறது.

இந்தியன் ஸிவில் சர்வீஸுக்கு டில்லியில் ககஉஅ-ம் வருஷம் போட்டி பரீக்ஷை வைத்து ௫ பேர் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

ஃ ஃ

மொராடாபாத்தில் ஆரிய சமாஜிகளின் ஊர்வலம் தடுக்கப்பட்டிருப்பதால் சத்தியாக்கிரகம் அங்கே முதலில் துவங்கப்படும் எனத்தெரிகிறது.

ஃ ஃ

புனாவைச் சேர்ந்த தலிகான் கலவர வழக்கில் ௫0 பேருக்கு அபராதம் விதித்ததில் ஒருவர் மாத்திரம் அபராதத்தைச் செலுத்த மறுத்துச் சிறைக்குச்சென்றாராம்.

ஃ ஃ

ஆண்களுக்கு கக-வயதிற்குள்ளும் பெண்களுக்கு க௫-வயதிற்குள்ளும் விவாகஞ் செய்து கொடுப்பது சட்டவிரோதமென ராஜகோட்டை ஜனப்பிரதிநிதி சபையார் ஒரு மசோதா நிறைவேற்றி யிருக்கின்றனர்.

ஃ ஃ

ஆயுதச் சட்டப்படியும் வெடி மருந்துச் சட்டப்படியும் சமீபத்தில் கைதுசெய்யப்பட்ட சைலேந்திரநாத சக்கரவர்த்தியை ஜாமீனில்விட அலகபாத் செஷன் ஜட்ஜி மறுத்துவிட்டாராம்.

ஃ ஃ

ஹைதராபாத்தில் இப்பொழுது பிளேக் நோய் அதிகரித்துக்கொண்டே வருகிறது. இதுவரையில் ௬00 பேர் மாண்டனர். சுமார் உரு000 பேருக்கு பிளேக் அம்மை குத்தப்பட்டிருக்கிறது.

ஃ ஃ

அலகாபாத்திலுள்ள ஒரு சதுக்கத்தில் ஏற்பட்ட தீ விபத்தினால் பலகடைகள் எரிந்துபோய்விட்டன வென்றும் அதனால் சுமார் ௫0000 ரூபாய் நஷ்டமேற்பட்டிருக்கு மென்றும் தெரிகிறது.

ஃ ஃ

பம்பாய் அரசாங்கத்தார் ஸ்ரீமதி சுபாலா பனந்திகாருக்கு இங்கிலாந்து சென்று தத்துவ சாஸ்திர ஆராய்ச்சியில் உயர்தரப் படிப்பு கற்க இரு நூறு பவுன் உபகாரச் சம்பளம் அளித்திருக்கிறார்கள்.

ஃ ஃ

மாற்றப்பட்ட இலாகா சம்பந்தமாக நிருவாக சபையில் ஏற்பட்ட ஒரு நெருக்கடியை உத்தேசித்து மத்திய மாகாண அரசாங்கத்தைச் சேர்ந்த இரண்டு மந்திரிகளும் தங்கள் பதவிகளை ராஜிநாமாச் செய்துவிட்டார்களாம்.

ஃ ஃ

டாட்டியாவில், ஹிந்துக்கள் அந்தரங்க மகாநாட்டில் ஹிந்துவைப்போல் மாறுவேஷம் பூண்டு வந்திருந்த ஒரு முஸ்லிம் போலீசாரால் கைது செய்யப்பட்டு ௫00 ரூபாய் ஜாமீனில் விடப்பட்டிருக்கிறார் எனத் தெரிகிறது.

ஃ ஃ

கோரசனி பருத்திவிதை வாங்க நிஜாம் அரசாங்கத்தினர் ௬ லக்ஷம் ரூபாய் அநுமதித்திருக்கிறார்களாம். ஸ்ரீமான் ஆதிராவ் என்னவர் விவசாய இலாகாவில் ஆராய்ச்சி முறை பயில நன்கொடை அளிக்கப்பட்டிருக்கிறாராம்.

ஃ ஃ

அமராவதிக் கருகில் சில தினங்கள் முன் வயலில் வேலை செய்துகொண்டிருந்த ஒருவர்மீது ஓர்புலி பாய்வதைக்கண்ட கார்மல பாடசாலையைச் சேர்ந்த உகிந்தாவென்ற மாணவர் அதன் தலைமீது கோடாரியால் அடிக்க அது காயமுண்டு ஓடியதாம்.

ஃ ஃ

லாகூர் சபாலாபீஸில் ராமலால் என்பவர் பையில் வைத்திருந்த ௬௬00 ரூபாய் நோட்டுகளைத் திருடிய ஒருவனுக்கு ஏழு வருஷம் கடுந்தண்டனையும் உரு00 ரூபாய் அபராதமும் விதிக்கப்பெற்றது. அபராதங் கட்டத்தவறினால்இன்னும் மூன்று வருஷம் சிறைவாசம் அநுபவிக்க வேண்டும்.

ஃ ஃ

சில மாதங்களுக்கு முன் அலகாபாத்தைச் சேர்ந்த ஒரு கிராமத்தில் ஒரு கொள்ளைக் கூட்டத்தினர், ஒருவீட்டில் கொள்ளையடித்துக்கொண்டு வெளியே போகும் போது அவ்வீட்டிலுள்ள பெண் குழந்தைகள் அழுததற்காக கொள்ளைக்கூட்டத் தலைவன் அவர்களது நகைகளைத் திரும்பக் கொடுக்கும்படி தன் ஆட்களுக்குக் கட்டளையிட அவ்வாறே செய்யப்பட்டதாம்.

## தமிழகம்.

நவம்பர் மாதம் ௬-ந் தேதி யன்று தூத்துக்குடியில் முத்துச் சிலாபம் ஆரம்பிக்கப்பட்டது. சிப்பிகளில் சிறந்த முத்துக்கள் இல்லை எனத் தெரிகிறது.

ஃ ஃ

சென்னை ராயபுரத்திலுள்ள அரசாங்கக் கட்டிடத்தில் சென்னை கார்ப்பொரேஷன் பிச்சைக்காரர்களுக்கான விடுதி ஒன்று ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

ஃ ஃ

இவ்வருடம் காங்கிரஸ் வாரத்தில் அடையாற்றில் பிரம்மஞான மகாநாடு கூடுவதற்கான சகல ஏற்பாடுகளும் வெகு துரிதமாக நடைபெறுகின்றன.

ஃ ஃ

சென்னை ராயபுரத்தில் மண் எண்ணெய் விளக்கின் எண்ணெய் மேலே கொட்டி தீப்பற்றிக் கொண்டதால் ஒரு சிறு பெண் மாண்டுபோனாள்.

ஃ ஃ

சில தினங்கள் முன் மதுரையில் மழையினால் ஒரு முகம்மதியர் வீட்டுச் சுவர் இடிந்து ௬௬-வயதுள்ள ஒரு பெண் மீது விழுந்ததால் அப்பெண் உடனே இறந்தாளாம்.

ஃ ஃ

திருநெல்வேலியிலும் பாளையங்கோட்டையிலும் வாந்தி பேதி நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டிருக்கிறதாம். பாளையங்கோட்டையில் ௬௫0 பேர் வரையில் இறந்திருக்கிறார்களாம்.

ஃ ஃ

கும்பகோணம் காளேஸ்வர சுவாமி கோவில் அம்மன் விக்கிரகத்தின் கழுத்திலிருந்த நகை ஒன்றை ஓர் பிராமண வாலிபன் அபகரிக்கப் போகும் சமயம் கண்டுபிடிக்கப்பட்டு போலீஸ் காவலில் வைக்கப்பட்டிருப்பதாய்த் தெரிகிறது.

ஃ ஃ

நவம்பர் மாதம் ௬-ந்தேதி திருவாரூர் ஜட்ஜ் ஜாகையில் புறக்கடைப் பக்கத்தில் ஒரு காக்கை திடீரென்று இறந்துவிழுந்ததாம். அது பிளேக்கின் அறிகுறியாயிருக்குமோ வென்று ஷை காக்கையைச் சென்னைக்கு அனுப்பியிருக்கிறார்களாம்.

ஃ ஃ

நீல் சிலை சத்தியாக்கிரகிகள் தலைவர் ஸ்ரீ. எஸ். மூர்த்தி, தலைவர்களின் ஆலோசனையின் பேரில் ஷை இயக்கத்தை நிறுத்தி வைக்கும் பொறுப்பை தான் ஏற்றுக்கொண்டிருப்பதாக ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

ஃ ஃ

சென்னையில் வரும் டிசம்பர் மாதம் நடக்கப் போகும் தென் இந்திய வேலையில்லா ரயில்வேத் தொழிலாளர் மகா நாட்டுக்குத் தலைமை வகிக்க டாக்டர் பி. வரதராஜலு நாயுடுவை ஷை தொழிலாளர் வரவேற்புக் கமிட்டிக்கூட்டம் கேட்டிருக்கிறது.

ஃ ஃ

பஞ்சாப் கிலாபத் தலைவரான ஒரு முகமதியர் இங்கிலாந்து முதலிய நாடுகளுக்குச் சென்றுவிட்டு புதுச்சேரியில் வந்திறங்கியவுடன், புதுச்சேரி இரகசியப் போலீசார் அவரிடம் எக்காரணமும் கூறாமல் கைது செய்ததாகவும் அவர் இப்பொழுது சென்னைச் சிறையிலிருப்பதாகவும் தெரிகிறது.

ஃ ஃ

ஸ்ரீமான் எஸ் முத்தையா முதலியார், கௌஹாத்தி தீர்மானமானது அபிப்பிராய பேதங்களுக்கு இடங்கொடுத்து விட்டதால் தாங்கள் சிலர் சேர்ந்து காங்கிரஸ் தேசியக் கட்சியென்று ஒரு கட்சியை ஏற்படுத்தியிருப்பதாக ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

ஃ ஃ

சில தினங்கள் முன் சென்னை கடலில் விழுந்து அலை அடித்துக்கொண்டுபோகும் தருவாயிலிருந்த ஒரு சிறு பெண்ணை ஒரு வாலிபர் காப்பாற்றியதற்கு ஷைபெண்ணின் சகோதரி ஓர் டாலர் கோர்க்கப்பட்டிருந்த பொன் சங்கிலியைக் கொடுக்க ஷை வாலிபர் அதை வாங்க மறுத்துவிட்டார்.

ஃ ஃ

கும்பகோணம் சாரங்கபாணி சுவாமி கோவிலில் திருவாய்மொழி சொல்லும் சினிவாசாச்சாரியார் கோஷ்டியாரும், தாத்தாச் சாரியார் கோஷ்டியாரும், யார் முதலில் திருவாய்மொழி ஆரம்பிக்குமுன் 'சாதித்தருள்வாய்' என்னும் மொழியைச் சொல்லுவது என்று முனிசிப் கோர்ட்டில் வழக்கு தொடுத்திருக்கிறார்களாம்.



## அடிகளின் உண்மை வாழ்வு.

பகுதி ச.

அத்தியாயம் உ௫.

ஸுலூ கலகத்தில் பல புதிய அனுபவங்கள் பெற்றேன். ஆழ்ந்து சிந்திக்கத்தக்க பல அரிய விஷயங்களை அக்கலகம் எனக்களித்தது. போர்க்கொடுமைகளை ஸுலூக் கலகம் தெளிவாக எனக்கு எடுத்துக்காட்டியது போல் அவ்வளவு தெளிவாக போயர் கலகம் எடுத்துக் காட்டவில்லை. இக்கலகத்தினைப் போரென்று கூறுதல் பொருந்தாது. மனித வேட்டை யென்றே சொல்லவேண்டும். நான் சந்தித்துப் பேச நேர்ந்த பல ஆங்கிலேயர்களும் என்னைப் போல் இவ்வாறே அபிப்பிராயப்பட்டிருக்கின்றனர். ஒவ்வொரு தினமும், நிராபராதிகளாயுள்ளவர்கள் வசிக்கும் சிறு குடிசைகளில் ஸோல்ஜர்களின் துப்பாக்கிகள் சாதாரண வெடிகள் வெடிப்பதுபோல வெடித்துக்கொண்டிருப்பதுபற்றிக் கேள்விப் படுவதும், அதன் மத்தியில் வசித்துக் கொண்டிருப்பதும் எனக்குப் பெரும்சோதனையாக இருந்தது. எனினும் எனது படையின் வேலை, காயமடைந்த ஸுலூக்களைப் பராமரிப்பதாயிருந்தமையால் அங்கு வசிப்பதெனும் கசப்பான மருந்தை நான் உட்கொண்டேன். நாங்களில்லாவிடில் ஸுலூக்கள் சிறிதும் கவனிக்கப்பட்டிருக்கமாட்டார்கள். எனவே இவ்வேலை என் மனத்திற்குச் சாந்தியளித்தது.

எனினும் ஆலோசிக்கத்தக்க இன்னும் பல விஷயங்கள் அங்கு காணப்பெற்றன. அது அதிக ஜனநெருக்கமில்லாத தேசம். ஆங்காங்கே குன்றுகளிலும் பள்ளத்தாக்குகளிலும் ஆடம்பரமற்றவர்களான க்ரால்ஸ் எனும் வகுப்பாரும் ஸுலூக்கள் என்பாரும் சிதறிக்கிடந்தனரெனலாம். அமைதியும் ஏகாந்தமும் நிலவிய அப்பகுதிகளில், காயமடைந்தவர்களைச் சுமந்துகொண்டோ அல்லது நாங்கள் தனியாகவோ செல்லுகையில் அடிக்கடி நான் சிந்தனையில் ஆழ்ந்துவிடுவதுண்டு.

பிரமசரியத்தைப்பற்றியும் அதன் பலாபலன்களைப் பற்றியும் நன்கு சிந்தித்தேன். அதன் பயனாக, அவைபற்றி நான் கொண்டிருந்த எண்ணங்கள் இன்னும் அதிகமாக பலப்பட்டன. எனது சகஊழியர்களுடன் அதுபற்றி விவாதித்தேன். தன்னைதான் அறிந்துகொள்ளுவதற்கு பிரமசரியம் எவ்வளவு இன்றியமையாததென்பதை நான் அப்பொழுது அறிந்திருக்கவில்லை. எனினும் முழுமனதுடனும் மனித சமூகத்திற்குத் தொண்டுசெய்ய விரும்புவோர் பிரமசாரியாயிராவிடில் அங்ஙனம் தொண்டாற்ற முடியாதென்பதைத் தெளிவாகக் கண்டேன். அக்காலத்தில் நான் செய்து வந்த பணியைப்போல் அடிக்கடி இன்னும் அதிகமாகச்செய்துகொண்டிருக்கச் சந்தர்ப்பங்கள் நேரிடுமென்றும், இல்லற சுகங்களிலும் பிரஜோற்பத்தியிலும பிள்ளைவளர்ப்பிலும் ஈடுபடுவேனாயின் அத்தொண்டுக்கு நான் தகுதியுடையவனாயிருக்க முடியாதென்றும் என்மனத்தில நன்கு பதிந்தது.

சுருங்கச்சொல்லின் ஏககாலத்தில் பொறியின்பங்களையும், ஆன்ம இன்பங்களையும் நாடி வாழ்க்கை நடத்தவியலாது. உதாரணமாக தற்போதைய சந்தர்ப்பத்தை எடுத்துக் கொள்ளுவோமாயின், எனது மனைவி கர்ப்பமாயிருந்து பேறுகாலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்திருப்பாளாயின் நான் பிரஸ்தாப முயற்சியில் கலந்துகொண்டிருக்க முடியாது. பிரம்மசரியம் அனுஷ்டிக்கப்படாமலிருப்பின், குடும்ப ஊழியமும் சமூக ஊழியமும் ஒன்றுக்கொன்று முரணாகி இருக்கும்.

இவ்வாறு சிந்தித்துக்கொண்டு முடிவாக ஓர் உறுதிசெய்துகொள்ள வேண்டுமெனும் விஷயத்தில் போதத்திரம் கொண்டிருந்தேன். உறுதி செய்துகொள்ளப் போகிறேனெனும் எண்ணம் ஓர் மகிழ்ச்சியை எனக்களித்தது. மனோராஜ்யங்களும் அதிகமாகி இடைவிடாத பலவிதமான ஊழியத்தைப் பற்றிய காட்சிகளையே என் மனக்கண்முன் அளித்துக்கொண்டிருந்தன.

இவ்வாறாக கடுமையான மனோவேலையிலும் சரீர சம்பந்தமான வேலையிலும் நான் ஈடுபட்டிருக்கையில் கலகத்தையடக்கும் வேலை அநேகமாக முடிந்துவிட்டதென்றும், நாங்கள் கூடிய விரைவினில் கலைக்கப்பட்டு விடுவோமென்றும் அறிக்கை யொன்று கிட்டியது. இச்செய்தி யெட்டிய இரண்டொரு தினங்களுள் எங்கள் படை கலைக்கப்பட்டு சில தினங்களுள் நாங்கள் எங்களது ஊர்களுக்குச் சென்றோம். சிறிது காலத்திற்குப் பின்னர் எங்களது வைத்தியப்படைக்கு விசேஷமாக வந்தனங் கூறுவதாக கவர்னரிடமிருந்து எனக்கொரு கடிதம் வந்தது.

பொனிக்ஸ் வந்து சேர்ந்ததும் பிரம்மசரிய விஷயத்தைப் பற்றி மிகுந்த ஆர்வத்தோடு சகன்லால், மகன்லால், வெஸ்ட் முதலியவர்களுடனும் ஏனையோருடனும் கலந்தாலோசித்தேன். அவர்கள் அந்தயோசனையைப் பெரிதும் விரும்பினார்கள். உறுதி செய்துகொள்ள வேண்டிய அவசியத்தை ஏற்றுக்கொண்டனர். எனினும் அதனாலேற்படுங் கஷ்டங்களை எடுத்துக் கூறினர். அவர்களில் சிலர் தைரியமாகப் பிரம்மசரியம் அனுஷ்டிக்க முற்பட்டனர். அவர்களில் சிலர் அதில் வெற்றியும் அடைந்தனர் என்பதை நானறிவேன்.

இனி ஆயுள் முழுதும் பிரம்மசரியம் அனுஷ்டிப்பதென உறுதி செய்துகொண்டேன். நான் மேற்கொண்டுள்ள வேலையின் முழுதத்துவத்தையும் நான் அப்பொழுது உணர்ந்திருக்கவில்லை. இக்காலத்திலுங்கூட அதனால் கஷ்டங்களேற்படுகின்றன. அவ்வுறுதியின் முக்கியத்தை மேலும் மேலும் உணர்ந்து வருகிறேன். பிரம்மசரியம் அனுஷ்டிக்கப்படாத வாழ்க்கை உயிரற்றதாகவும் மிருகத்தனமானதுமாகவே எனக்குத் தோன்றுகிறது. மிருகத்திற்கு இயற்கையில் புலனடக்கம் (தன்னடக்கம்) கிடையாது. முன்னர், மதங்கிரந்தங்களிலெல்லாம் பிரமசரியத்தைப்பற்றி மிகைபடப் புகழப்பட்டிருப்பதாக எனக்குத் தோன்றியவைகளெல்லாம், இப்பொழுது அனுபவத்தின்மீது முற்றும் சரியாகக் கூறப்பட்டவைகள் என்பது எனக்கு நாளுக்கு நாள் அதிக தெளிவாகத் தெரிந்துகொண்டு வருகிறது.

ஆச்சரியப் படத்தக்க சக்திகொண்ட பிரம்மசரியம் அனுஷ்டிப்பது இலகுவான விஷயமல்ல வென்பதையும், அது சரீரத்தை மட்டும் பொறுத்த விஷயமல்ல வென்பதையும் கண்டுகொண்டேன். பிரம்மசரியம் சரீர அடக்கத்துடன் துவங்குகின்றது. ஆனால் சரீரத்தோடேயே அது முடிந்துவிடவில்லை. கெட்ட எண்ணமிருப்பின் பிரம்மசரியம் முற்றுப் பெறாது. உண்மையான பிரம்மசாரி, சரீர இன்பங்களைப் பூர்த்தி செய்துகொள்ளுவதாகக் கனவுகூடக் காணமாட்டான். அத்தகைய நிலையில் அவன் இருக்கும்வரை அவன் இன்னும் பிரம்மசரிய துறையில் எவ்வளவோ முன்னேற வேண்டியிருக்கும்.

சரீர சம்பந்தமான பிரம்மசரியத்தை அனுஷ்டிப்பதுக்கூட எனக்குப் பெருங் கஷ்டமாக இருந்துவந்திருக்கிறது. ஆனால் இன்று நான் சாவதானமான நிலையிலிருக்கிறேன் என்று நான் சொல்லிக்கொள்ள முடியும். எனினும் மிக முக்கியமானதாயுள்ள, மனதை பூரணமாக வசப்படுத்தும் துறையில் நான் இன்னும் உழைக்கவேண்டியிருக்கிறது. அதற்கு முயற்சியாவது விருப்பமாவது என்னிடம் குறைவாக இருக்கிறதென்று சொல்லமுடியாது. கெட்ட எண்ணங்கள் எங்கிருந்து உற்பத்தியாகின்றன வென்பதை நான் அறிந்துகொள்ள முடியவில்லை. அதுவே மனத்தைப் பூரணமாக வசப்படுத்த முடியாமைக்குக்காரணம். கெட்ட எண்ணங்களை அகற்றும் சக்தி மனிதனிடம் இருக்கிற தென்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. எனினும் அச் சக்தியினை ஒவ்வொருவரும் தாமே முயற்சித்துப் பெறவேண்டும். மகான்களும் தீர்க்கதரிசிகளும் தங்களது அனுபவங்களை நமக்குக் காட்டியிருக்கின்றனர். ஆயினும் எல்லோரும் கையாளத் தக்கதும், பிழைபடாததுமான முறை எதையும் அவர்கள் நமக்கு அளிக்கவில்லை. தவறுகளில்லாப் பூரணத்தன்மை தெய்வாதீனமாகத்தான் கிட்டவேண்டும். எனவே கடவுளை அறியப் பாடுபட்டவர்கள் அவர்களது கடுமையான முறைகளால் தூய்மையடைந்து கண்டுபிடித்த ராமநாமம்போன்ற மந்திரங்களை நமக்கு அளித்திருக்கின்றனர். கடவுளது அருளுக்கு நாம் அடிமைப்படாமல் மனத்தைவசப்படுத்தும் தன்மை பெறமுடியாது. ஒவ்வொரு மதநூல்களும் இதனையே போதிக்கின்றன. பிரம்மசரியத்தை நாடி நான் முயற்சிக்கும் ஒவ்வொரு கணமும் இவ்வுண்மையினை உணர்ந்து வருகிறேன்.

அம்முயற்சி சம்பந்தமான (பிரம்மசரியம்) சரித்திரமும் போராட்டமும் இனி வரும் அத்தியாயங்களில் கூறப்படும். இவ்வேலையை நான் எவ்வாறு துவங்கினேன் என்பதைக் கூறி இவ்வத்தியாயத்தை முடிக்கிறேன். ஆரம்பத்திலிருந்த உற்சாகத்தில் பிரம்மசரியம் அனுஷ்டிப்பது பெரிதும் சுலபமாகத் தோன்றியது. எனது வாழ்க்கை முறையில் முதலாவது நான் செய்த மாற்றம் எனது மனைவி படுத்திருக்குமிடத்தில் நான் படுப்பதை நிறுத்தியதேயாகும்.

க௯00-ம் ஆண்டு முதல் இடை இடையே அனுஷ்டித்து வந்த பிரம்மசரியம் க௯0சு-ம் வருட உறுதியுடன் திடம்பெற்றது.

## கன்னனும் கண்ணனும்.

திரு. ஷாம்லால் நேட்டா 'லோஷல் ரிபார்மர்' பத்திரிகையில் எழுதியது :—

பாரதப்போர் நிகழ்ந்து ஆயிரக் கணக்கான ஆண்டுகள் சென்றுவிட்டன. அக்காலத்திற்றான் கண்ணபிரான் இப்பூவுலகில் அவதரித்தார். கௌரவர்களுக்குத் தலைவனாக விளங்கிய துரியோதனன் பாண்டவர்களை கஉ-ஆண்டுகள் வனவாசம் செய்யுமாறு அனுப்பிவிட்டான். இந்நெடுங்காலம் முடிந்த பின்னர், பாண்டவர்கள் தங்கள் நாட்டைத் தங்களிடம் திரும்பக் கொடுக்குமாறு கேட்டனர். ஆனால் அவர்களது கோரிக்கை மறுக்கப்பட்டது. இதன் பயனாகப் பாண்டவர்கள் போருக்கு ஆயத்தம் செய்து கண்ணபிரானது உதவியைக் கோரினர். போரில் ஓர் தினம், பாண்டவர்களுள் விற்போரில் மிகத் திறமை வாய்ந்தவனான விஜயன், விற்போரில் உலகிலேயே தனக்குநிகரில்லாதவனானகன்னனை வீழ்த்திவிட்டான். பின்னர், தனது பராக்கிரமச் செயல்களைப்பற்றிப் புகழ்ந்துபேசத் துவங்கினான். கண்ணபிரான் அவனைப் புகழ்ந்து ஒரு வார்த்தை கூடக் கூறுதலோடமையாது, வள்ளன்மையிற்றலைசிறந்த கன்னனைப்பற்றிப் புகழுரைகள் வழங்கிக் கொண்டிருந்தார். புரோகிதர்கட்கும் யாசகர்கட்கும் ஒவ்வோர் நாளும் ஒன்றரை மணங்கு பொன் வழங்காது கன்னன் உணவு கொள்ளுவதில்லை யெனச் சொல்லப்படுகிறது.

விஜயன் :— கண்ணா! கன்னனைத் தோல்வியுறச் செய்துவிட்டதை நீயே நேரில் கண்ட பின்னரும் எனக்கு ஊக்கந்தருமாறு எனது வீரச்செயல்களைப் புகழ்ந்து நீ ஒருமுறைகூட வழங்காததேன்? அத்தோடு நில்லாது கன்னனைப்பற்றிப் புகழ்வதில் நீ சிறிதும் ஓய்விதில்லை

கண்ணன் :— ஏ விஜயா! கன்னன் பெரிதும் புகழுக்குரியவனே! அவன் ஓர் விசித்திரமானவன். கன்னனைப் புகழுவது உண்மையைத் தொழுது, ஆண்டவனால் சிருஷ்டிக்கப்பட்ட ஜீவன்களிடத்துக் கருணை காட்டுவதாகும்.

விஜயன் :— அவனிடம் புகழுக்குரிய பெருமைகள் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. தானங் கொடுப்பது ஒவ்வொருவரும் வழக்கமாக ஒவ்வொரு நாளும் அனுஷ்டித்துவரும் செயலாகும். நானும் அவ்வாறே செய்துவருகிறேன்.

கண்ணன் :— பிச்சைக்காரன் உடை தரித்து வா! போர்க்களத்தில் கன்னன் மரணத் தருவாயில் கிடக்கும் இடத்திற்கு அழைத்துச் செல்லுகிறேன்.

பின்னர் இருவரும் தங்கள் உடைகளை மாற்றிக்கொண்டு போர்க்களத்தை நாடிச் சென்றனர். கன்னனை வெகு தூரத்திலிருந்தே கண்டனர். அங்கிருந்தே நெடுநேரமாகப் பசியால் வருந்துபவர்களைப் போல்உதவியைக் கோரிக்கத்தினர். ஏழைமக்களிடம் கனனன் கருணை காட்டாதிருப்பதாகக் குறை கூறினர்.

கன்னன் :— ஆத்திரமாக ஒன்றுங் கூறிவிடாதீர்! கன்னன் உடலில் இன்னும் சிறிது உயிர் இருந்துகொண்டிருக்கிறது. உங்களுக்கு என்ன தேவையென்று சொல்லுங்கள்.

கண்ணன் :— உண்ண உணவும் பருகத் தண்ணீரும் தேவை.

கன்னன் :— ஆ! கடவுளே! உங்களது கோரிக்கைகளைப் பூர்த்திசெய்ய நான் என் வீட்டிலிருக்கேனில்லையே என்றெண்ணுகிறேன். அவ்வாறிருந்திருப்பேனாயின், உங்களது பசியை மட்டுமல்ல, உங்களது வறுமையையே அகற்றியிருப்பேன். நீங்கள் உங்கள் வாழ்நாள் முழுதும் சிறிதும் கஷ்டமின்றிச் சுகமாகக் காலந் தள்ளக் கூடிய நிலையை அளித்திருப்பேன்.

கண்ணன் :—உனது விடையென்ன? நீ சுற்றிச் சுற்றிச் சொல்வதன் பொருள் எங்களுக்கு விளங்கவில்லை. நாங்கள் திரும்பிப்போகவேண்டுவதுதானா?

கன்னன் :—போய்விடாதீர்! நில்லுங்கள்! எனது வள்ளன்மையைப்பற்றி ஐயுற வேண்டாம். எனது பற்களுள் ஒன்றில் பொன் வைக்கப் பெற்றுள்ளது. அதனை உடைத்துக் கடைக்கு எடுத்துக்கொண்டு செல்லுங்கள்.

கண்ணன் :—நாங்கள் மனிதர்களது பற்களைத் தகர்க்கக்கூடிய மிருக இயற்கை பொருந்தியவர்களல்ல.

கன்னன் :—உங்களுக்கருகாமையில் கிடக்கும் கல்லை யெடுத்து வாருங்கள்.

கண்ணன் :—நீ மரியாதையில்லாதவனாக காணப்படுகின்றாய். அன்னியர்களை ஏன் கஷ்டப்படுத்துகின்றாய்?

இவ்வாறு கூறிவிட்டு கண்ணபிரானும் விஜயனும் தாங்கள் நிற்குமிடங்களிலிருந்து புறப்பட்டனர். இதைக்கண்ட கன்னன் அவர்களைச் சிறிது நேரம் தாமதிக்கும்படி பரிதாபமான குரலில் அவர்களை வேண்டிக்கொண்டான். தனக்கேற்பட்ட மிகுந்த துக்கத்தில் தனது கால்களால் அப்பல்லை அசைத்துப் பிடுங்கி வேறாக வைத்தான்.

விஜயன் இச் சிறு சோதனையைக்கண்டு திருப்தியடைந்தபோதிலும் இன்னும் சிறிது சோதிக்க விரும்பினான்.

கண்ணன் :—கன்னா! உனது சொத்தையாய்ப்போன ஆபாசமான பல்லை நாங்கள் தொடமாட்டோம்.

கன்னன் :—நான் அதனைப் பரிசுத்தமாக்கிவிடுகிறேன். எனது வில்லையும் அம்பையும் எடுத்துவர தயவுசெய்து எனக்கு உதவி செய்யுங்கள். அதன் உதவிகொண்டு அப் பல்லினின்றும் தங்கத்தை வேறாகப் பிரித்துவிடுகிறேன்.

கண்ணன் :—எங்களை ஏவி மீண்டும் நீ ஏன் அவமதிக்கிறாய்?

கன்னன் :— என்னை மன்னியுங்கள். நானே யாவும் செய்து முடிக்கிறேன்.

பிறகு அவன் மெதுவாக, குருதிவெள்ளம் ஓடும் தனது முழங்கால்களின் உதவி கொண்டு நகர்ந்து வில்லுகளும் அம்புகளும் வைக்கப்பெற்றிருக்கும் இடத்தை யடைந்து, வில்லைத் தனது பாதங்களுக்கு அடியில் வைத்துக்கொண்டு தனது பற்களால் கயிற்றை இழுத்துக்கொண்டான். அம்பின் உதவிகொண்டு பல்லிலிருந்த தங்கத்தை வேறாக்கி அதை கங்கை நீர் கொண்டு கழுவி சுத்தம் செய்தான்.

கன்னன் :—அன்பர்களே! உங்களுக்குத் தங்கம் இதோ இருக்கின்றது.

கண்ணன் :—கன்னா! உண்மையில் நீ என்றும் அழியாப் புகழுக்கு உரியவனே! உனது தன்னல மறுப்பையும் வள்ளன்மையையும் வருங்கால சந்ததியார் எக்காலத்திலும் மறக்க முடியாது.

கன்னனது தீரச் செயல்களைக் கண்டு கண்ணனும் விஜயனும் பிரமித்துப் போனார்கள். கன்னனைப்பற்றி இழிவாகத் துவக்கத்தில் பேசிய விஜயன் நாணமுற்றான். தன்னை மன்னிக்கும்படி வேண்டினான்.

ஊள்ளுறை.


| | | |
|---|---|---|
| உள்ளத்தனைய உவமை. | ... | க |
| தேவீ வதனு. | ... | உ |
| பதிலுக்குப பதில். | ... | ,, |
| பதில் வார்த்தை. | ... | ரு |
| சேட்பன (பாட்டு.) | ... | ,, |
| ருசிகரமான சாகூியம். | ... | ,, |
| காந்தி பேச்சு. | ... | ,, |
| பெஸண்டம்மையாரின் உபதேசம். | | ச |
| சியநேசனின் விபரீதப் போக்கு | ... | ,, |
| இங்கிலாந்தின் வேஷம். | ... | ரு |
| எதிரொலி. | ... | ,, |
| அயலகம். | ... | சு |
| தாயகம். | ... | ,, |
| தமிழகம். | ... | ,, |
| அடிகளின் உண்மை வாழ்வு. | ... | எ |
| கன்னனும் கண்ணனும். | ... | ,, |
| தலையங்கம்:— | | |
| சமயப்பிரசாரம். | ... | அ |
| உபதலையங்கம்:— | | |
| வர்ணுசிரம முனைப்பு. | ... | ,, |
| எண்டிசைக்காட்சி. | ... | அ-கூ |
| அடிகளின் இலங்கை விஜயம். | ... | கூ |
| ராயல் கமிஷன். | ... | ,, |
| உள்ளூர்ச் செய்தி. | ... | ,, |
| தந்திச்செய்தி. | ... | ,, |
| குருகுல விஷயம். | ... | க0 |
| பலதிரட்டு | ... | ,, |
| கப்பற் செய்தி. | ... | ,, |
| நமது தபால் பெட்டி. | ... | ,, |
| ராயல் கமிஷன் நியமனம். | ... | கக |


நாளென் செயும்! வினைதானென்
செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

குமரன், காரைக்குடி.

பிரபவ ஆ கார்த்திகை மூ உஉ

# சமயப்பிரசாரம்.

சமய நெறியைப்பற்றி மக்கட்கு எடுத்துக்கூற வேண்டுவதவசியமாகும். சமய உணர்வில்லாத மக்கள் சிரிய ஒழுக்கமும் ஆண்டவன்பால் மெய்யன்பும் கொள்ளுதல் முடியாதென்பது பெரியோர் கருத்து. எல்லாப்பொருள் களிலும் உள்ளும் புறமுமாய் நின்றொளிரும் சச்சிதானந்தப் பரம்பொருளை அறிவதற்கும் அடைவதற்குமுற்ற வழிகளே சமயநெறிகள் என்று கூறப்படுகின்றன. ஒவ்வொரு சமயமும் கடவுளுக்கு வேறு வேறு பெயர்கூறினும் கடவுள் ஒன்றே என்று கூறுதலைக் காணலாம். சைவரும் ஒருவரே கடவுள் என்று சாற்றுகிறார். வைணவரும் அப்படியே வழுத்துகிறார். கிறிஸ்தவரும் மகம்மதியரும் கடவுள் ஒன்றென்றுதான் கூறுகிறார்கள். ஆனால், கடவுளுக்கு ஒவ்வொரு பெயரை ஒவ்வொருவரும் வைத்துக் கொண்டு அல்லற்படுவது கண் கூடு. குணமுங் குறியுமில்லாது எங்கும் நிறைந்த பரம்பொருளுக்குக் குணமுங் குறியுங் கொள்கைகளும கற்பிக்கப் படவே ஞானமயமான மெய்யுணர்வு மறைந்து அடிமைத்தனமான பொய்யுணர்வு மல்கிவிட்டது. கோயில்களும் நூல்களும் கடவுளை அறிவதற்கும் அடைவதற்கும் உபகரணமாக ஏற்பட்டனவேயாகும். விரிந்த அறிவில்லாத மக்கட்குக் கடவுளைப் பற்றி அறிவுறுத்த முடியாதபொழுது விக்கிரகத்தை வணங்குமாறு பணித்தனர்.

அருவ வணக்கஞ் செய்யமுடியாத மக்களுக்கு உருவ வணக்கஞ் செய்தல் பயனுடையதாகுமென்று சமய வாதிகள் கருதினர். இது காரணமாகக் கல்லிலும் செம்பிலும் உருவச் சிலைகள் செய்து ஸ்தாபிக்கபபட்டன. எப்படி அரசனை நேரிலறிய முடியாத ஜனங்கள் அரசனுடைய உருவப்படத்தை வீட்டில் தொங்கவிடுகிறார்களோ அதுபோலவே அருவமாயுள்ள கடவுளை அறிய முடியாத மக்கள் அவன் பெயர் சொல்லி உருவச சிலைகளை நாட்டுவாராயினர். காலப்போக்கில் அவை வளர்ந்து இப்பொழுதுள்ள கோயில் மதமாக முற்றிவிட்டன. உலக விவகாரத்தில் மோதுண்டு களைத்து வருந்தும் மக்கள் மனஅமைதி பெற்று ஆண்டவனை எண்ணித் துதிப்பதற்காகக் கோயில் ஆதியில் வேண்டப்பட்டது. பின்னர் புளுகுவதற்கென்றே சிலர் போட்டிபோட்டு ஒவ்வொருகோயிலுக்கும் தலபுராணப் புளுகுகளைப் புளுகிக் குவித்தனர். இந்தப் புளுகுப் புராணங்களால் உண்மையான—எங்கும் நிறைந்த கடவுளைப் பற்றிய உணர்வு மழுங்கப் பெற்றுக் கல்லிலும் செம்பிலும் செய்யப்பட்டிருக்கும் உருவங்களே கடவுள் என்னும் பொய்யுணர்வு இது கால மக்கள் மனத்தை ஈர்த்து நிற்கின்றது.

அரசனுடைய படமானது எப்படி அரசனுவதில்லையோ, அரசனுக்குரிய சக்திகள் எப்படி அரசன் படத்திற்கில்லையோ அதுபோல எங்கும் நிறைந்த கடவுளுக்குரிய சக்தியை மக்களால் செய்து வைக்கப் பெறும் விக்கிரகங்களில் எதிர்பார்ப்பது உண்மை காணும் நெறியன்று. ஞானிகளுக்குக் கோயில் அவசியமில்லை என்று சமய வாதிகள் கூறுவதுங் காண்க. ஆதியில் கோயில்கள் கண்ட நோக்கம் மக்கள் நலத்தைக் கருதியேயாயினும் இன்று அந்நிலையில் அவை நடைபெறவில்லை. இந்நாள் மனிதன் எவ்வளவு ஒழுங்கீனமும் கொடுமைகளுஞ் செய்கிறானோ அவ்வளவையும் கடவுள் விரும்புகிறார்; அவரும் அப்படியே செய்கிறார் என்று கூறி அப்படியே கோயில்களில் உற்சவங்களும் நடைபெறுகின்றன. இம்முறையிலேயே கடவுள் தாசியை விரும்புகின்றவர், வைப்பாட்டி வைத்திருப்பவர், களவு செய்பவர், கொலையை மகிழ்ந்து ஏற்பவர், புலாலுண்பவர் இன்னும் பல இழிந்த காரியங்களைச் செய்பவரென்ற முறையில் உற்சவங்கள் நடைபெறுவதைக் காணலாம்.

ஒழுங்கீனங்களுக்கெல்லாம் ஆதாரமாக நிற்பது தலபுராணங்களேயாகும். கடவுளைக் கேலிபண்ணுவதற்கும், அன்னிய சமயங்களைத் தூஷிப்பதற்கும், அன்னிய சமயவாதிகளை அழித்து ஒழிப்பதற்கும், தங்கள் கூஷியார் செய்யும அக்கிரமங்களையும கொடுமைகளையும் மறைப்பதற்கும், சில குழுவினர் பொருள் தேடி உயிர்வாழ்வதற்குமே இப் புராணங்கள் எழுதப்பட்டுள்ளன என்பதை உண்மையுணர்வோடு படிப்பாரறிவர். இப் புராணங்களை மெய்யென்று கூறுவார் செய்யும் பிரசாரம் மககளைப் பாழ்படுத்தும பிரசாரமேயன்றி நேரிய சமயப் பிரசாரமாகாது. சமயப் பிரசாரமென்பது அறிவோடு கூடி ஒழுக்க நெறிக்கு முரண்படாமல் செலுதல் வேண்டும். எவ்வளவு ஒழுககங் கெட்டாலும், எவ்வளவு கொடுமை செய்தாலும், ஏதாவது ஒரு கோயில் ஊருணியிற்றலைமுழுகினல் எல்லாப் பாவமும் நீங்கிக் கைலாசம் கிடைக்கும் என்று செய்யப்படும் பிரசாரம் மோசமானதே யாகும். மூடபக்தியை விட ஒழுக்கமே ஓம்பத்தக்கதாகும். ஒழுககத்தை உறுதிசெய்து கடவுளை நோக்கும் வழிகளை எடுத்துக் கூறுவதே உண்மைச் சமயப் பிரசாரமாகும். ஒழுக்க ஈனமான பிரசாரங்களை ஆதரிகரும் நூல்களையும், சமயவாதிகளையும் புறக்கணித் தொதுக்க வேண்டுவது கடமை யென்பதை மக்கள் உணர்வாராக.

---

## வர்ணுசிரம முனைப்பு.

இன்றைய நிலையில் வர்ணுசிரமமென்பதன் பொருள் ஒருவரை யொருவர் தாழ்த்தி நசுக்கப் பார்ப்பதென்பதாகும். சிலர் மேலிருந்து வாழ்வதன் பொருட்டுப் பலர் நசுக்கப்படவேண்டுமென்று கருதுவது பெருங் கொடுமையாகும். வர்ணுசிரம முறையால் சிலர் மீளா அடிமையாகவும், சிலர் வானவராகவும் கருதப்படுவது கன்கண்ட அனுபவமாகி விட்டது. இந்நிலை மாறவேண்டிய காலம் வந்திருப்பதை யறிந்து சுயநலங்கொண்டவர்கள் உறுமுகின்றனர். இதன் பயனுக வருணுச்சிரம மகாநாடுகள் கூடத் துவங்கியிருக்கின்றனர். திருக்கோவலூரில் நடைபெற்ற ஒரு பார்ப்பனச் சங்க ஆண்டு விழாவில் செய்யப்பட்ட தீர்மானங்கள் வருமாறு:—

க. இச்சபை ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் அனுப்பிய பிரசாதத்தை பக்தி பூர்ணமாக அங்கீகரித்து எங்களது சிஷ்ய பக்தியை ஆசாரிய பாதங்களில் வணக்கத்துடன் விஞ்ஞாபனம் செய்கிறது.

உ. வருணுஸ்ரம தர்மம் நமது பாத கண்டத்திலுள்ள மனுஷ்ய கோடிகளுக்கு ஆத்மார்த்த வழியில் மோக்ஷ சாம்ராஜ்யத்தைக் கொடுப்பதற்காக ஏற்பட்டிருப்பதால் அதில் பூரண நம்பிக்கை கொண்டிருக்கிறது.

ங. விதவா விவாஹம் ருதுமதி விவாஹம் முதலியவை சாஸ்திர விரோதமான தென்றும், தேச க்ஷேமத்திற்கும், இந்திய நாகரிகத்திற்கும், பாரமார்த்தீக நிலைமைக்கும் விரோதமான தென்றும் ஆதலால் ஆஸ்திகர் அதை ஆதரிக்கக் கூடாதென்றும் வேண்டுகிறது.

ச. தீண்டாதவர்களது முன்னேற்றத்தில் சாஸ்திர விரோதமில்லாமல் பூரண ஆதரவை அளிப்பதோடு அராவசியமாக அவர்களை ஆலயத்தில் நுழைப்பிக்க அனுமதி கொடுக்கக் கூடாதென்றும் எச்சரிக்கை செய்கின்றது.

ரு. கொஞ்சகாலமாக மனுஸ்மிருதியை சிலர் அதர்ம சாஸ்திரமென்று கூறுவதையும் அதை அரசாங்கத்தார் அழித்துவிட வேண்டுமென்று கூறுவதையும் கண்டித்து இதுபோன்ற மத தூஷணை செய்யாமலிருக்கும்படி அவர்களை வேண்டுகிறது.

சு. சென்னையில் நடக்கப்போகும் வருணுஸ்ரம தர்ம மகாநாட்டை ஆதரிப்பதோடு அதற்குப் பிரதிநிதிகளையும் இச்சபையிலிருந்து அனுப்பத் தீர்மானிக்கிறது.

எ. விவாஹ வயது முதலிய மத விஷயங்களைச் சட்டசபையில் விவாதிக்கலாகாது என்று அரசாங்கத்தாரை வேண்டுகின்றது. மிஸ். மேயோ எழுதிய 'இந்திய மாதா' என்ற புஸ்தகத்தை இச்சபை கண்டிக்கிறது.

வருணுசிரம தர்மப் புலியைச் சாந்தமான பசுவென்று கூறி வந்த கதையையொப்புக்கொண்ட காலம் சென்றுவிட்டது. தேசமக்கள் விழிப்படைந்துவிட்டனர். புலியென்பதை உணர்ந்தாய்விட்டது. இனி ஏமாற்ற முடியாதென்பதை வர்ணுசிரமப் பித்தலாட்டக்காரர் உணர வேண்டும். மேலே காட்டப்பட்டுள்ள தீர்மானங்களை நேயர்கள் உற்று நோக்குதல் வேண்டும். இவ்வளவு பிற்போக்குக் கொள்கைகள் தேசத்தில் பாவவேண்டுமென்று இன்று விரும்புகிற கூட்டமொன்று இந் நாட்டில் இருப்பதே அவமானமாகும். வழக்கம்போல் தேச அபிவிருத்திக்குரிய ஒவ்வொரு திருத்தமும் மதத்தைக் கெடுத்துவிடுமென்ற பழம்பாட்டு இந்தக் கூட்டத்திலும் பாடப்பட்டிருக்கிறது. "நான்கு ஜாதி உண்டு. அதில் தலையாய பிராமணர் அரசியலில் நுழையக்கூடாது. கணக்கு வேலையில் நுழையக்கூடாது. வியாபாரத்தில் புகக்கூடாது. காபி கிளப் வைக்கக் கூடாது. வைதிகமாக வேதம் ஓதிக்கொண்டிருக்க வேண்டும்" என்றுவது இக்கூட்டம் தீர்மானித்திருந்தால் ஏதாவது பொருளிருந்திருக்கும். 'வர்ணுசிரமம், வர்ணுசிரமம்' என்று வீண் தீர்மானம் செய்து உலகத்தை ஏமாற்ற இனி முடியாது. ஒவ்வொருவனும் புத்தியுள்ளவனுகுங் காலம் எதிர் நோக்கி வேகமாக வந்து கொண்டிருக்கிறது. சொன்னதெல்லாம், எழுதினதெல்லாம் தெய்வ வாக்கென்று கருதி ஏமாந்த காலத்தை இனி எதிர்பார்ப்பது அறியாமையாகுமன்றிப் பலன் தருவதன்று.

---

## எண்டிசைக்காட்சி.

### சமூக அனுபந்தம்.

தன வைசிய சமூக அனுபந்தம் அடுத்த வாரம் வெளிவரும். இவ்வாரம் பத்திரிகை பதினெட்டுப் பக்கங்களோடு வெளிவருவதால் அனுபந்தம் இவ்வாரம் நிறுத்தப்பட்டது.



### தாய்மொழியில் கல்வி.

நம்மையாண்டு வருவோர் ஆங்கிலராயிருப்பதாலும் ஆங்கிலமே அரசாங்கத்தார் கையாண்டுவரும் பொதுமொழியாக இருப்பதாலும் நமது கல்விச்சாலைகளில் பெரும்பாலும் சிறுவர் சிறுமியர்க்கு ஆங்கில மொழியின் மூலமாகவே கல்வி போதிக்கப்பெற்று வருகின்றது. தாய்மொழியன்றிப் பிறிதோர் மொழியின் மூலமாக வேறெந்நாட்டிலும் கல்வி போதிக்கப்படுவதாக யாம் கண்டதில்லை, கேட்டதுமில்லை. நாம் இவ்வாறு கூறுவதினின்றும் பிறமொழிகள் பயிலலாகாதென நாம் கூறுவதாக எவரேனும் கருதலாகாது. அவ்வாறு எண்ணின் அது அவர்களது தவறேயன்றி நமது தவறல்ல. நாம் கோருவதெல்லாம் நமது சிறுவர் சிறுமியருக்குக் கல்விச்சாலைகளில் நமது தாய் மொழியில் பாடங்கள் கற்பிக்கப்பட வேண்டுமென்பதேயன்றி வேறல்ல. துவக்கத்திலேயே அன்னிய மொழியைக் கற்க முயற்சிப்பதால் நேருந் தீங்குகளைப்பற்றி பேரறிஞரான ஸர் பி. ஸி. ரே அவர்கள் பாட்னுவில் நடைபெற்ற ஓர் மகாநாட்டில் பின் வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள்:—

> துவக்கத்திலேயே பிறமொழியினைக் கற்க முயலுவதால் காலம் பெரிதும் வீணுக்கப்படுகின்றது. அது சிறுவர்களின் உற்சாகத்தையே கெடுத்து விடுகின்றது.

இவ்வார்த்தைகள் அனைத்தும் உண்மையே. நம் நாட்டில் தாய் மொழியில் மாணவர்கட்குக் கல்வி வழங்கப்பட வேண்டுமென்ற கொள்கை நாளுக்கு நாள் வலுவடைந்து வருவது குறித்து மகிழ்வெய்துகிறோம். பிறமொழியின் மூலமாகக் கல்வி பயிலுவதால் சிறுவர்கள் நாளடைவில் தம் தாய் மொழியில் பற்றில்லாது போவதையும் அதன் பயனுகத் தாய் நாட்டினிடம் பற்றில்லாது போவதையும் காண்கின்றோம். எனவே தாய் மொழியின் மூலமாகக் கல்வி போதிக்கப்படவேண்டுமெனும் விடயத்தில் தாய் நாட்டினிடமும் தாய்மொழியினிடமும் பற்றுக்கொண்டவர்கள் பேரூக்கங்கொண்டு உழைக்கவேண்டுமென்பது நமது பேரவா!

### வேலையில்லாத் திண்டாட்டம்.

மத்திய வகுப்பாருள் நம் நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகப்பட்டுவருகின்றதென்பதை அனைவரும் ஏற்றுக் கொள்ளவேண்டுவது தான். இத்தகைய நிலைக்குக் காரணமென்ன? என்பதை ஒவ்வொருவரும் ஊன்றிக் கவனித்தல் அவசியமாகும். படித்த பல இளைஞர்கள் வேலையின்றிக் கஷ்டப்படுவதைக் கண்கூடாகக் காண்கின்றோம். ஸர். பி. ஸி. ரே. அவர்கள் ஓரிடத்தில், "அனைவரும் பல்கலைக் கழகக் கல்வியில் பற்று வைத்தலாகாது. ஆரம்பப்படிப்புடன் (ஸெக்கண்டரி) நிறுத்திக் கொண்டு தொழில்முறைகளில் திரும்ப வேண்டுவது அவசியமாகும். இதுவே மத்திய வகுப்பினரது வேலையில்லாக் கொடுமையைப் போக்கும்' எனக் குறிப்பிட்டதை அன்பர்கட்கு நினைப்பூட்டுகின்றோம். ஒவ்வோராண்டும் பல்கலைக் கழகங்களினின்றும் பட்டம் பெற்று ஆயிரக் கணக்கான இளைஞர்கள் வெளியேறுகின்றனர். இவர்களனைவருக்கும் வேலை எங்கு எவ்வாறு கிடைக்க முடியும்? பேனு ஓட்டும் வேலை தவிர வேறு எவ்வேலைக்கும் இவர்கள் தகுதியற்றவர்களே. இப்படிப்பிற்கு இவர்கள் செலவிடும் பணத்தைக்கொண்டு ஏதேனும் தொழிற் கல்வி பெற்றிருப்பார்களாயின் அத்தொழில் செய்து பிழைப்பிற்கு வழி தேடிக்கொள்ள முடியும். அனைவரும் சர்வகலாசாலைப் படிப்புப் படிப்பதால் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகப்படுமேயன்றிக் குறைய வழியில்லை. நம் நாட்டிலுள்ள இளைஞர்கள் வீணுகப் பொருள் விரயஞ் செய்து கலாசாலைப் படிப்புப் படிக்காது தொழிற்கல்வி பயின்று வாழ்க்கையில் வெற்றி பெற முன் வரவேண்டும். தொழில் துறைகளில் ஈடுபடுவது கேவலமென்ற உணர்ச்சி சிலருக்கு இருந்து வருகின்றது. அது தவருன உணர்ச்சியாகும். தொழில் துறைகளில் ஈடுபடுவது எவ்வகையிலும் கேவலமல்ல. மேனுட்டவர்களைக் கவனிப்போமாயின் இவ்வுண்மை இனிது விளங்கும்.

### ஓர் வெள்ளையனின் குறும்பு.

> "வரியாக வசூலிக்கப்பெறும் பொருளைத் தமக்குத் தகுதியெனத் தோன்றும் முறையில் செலவு செய்துகொள்ள ஆளும் வகுப்பாருக்கு இருந்துவரும் உரிமையை சுதேசிகள் ஏற்றுக்கொண்டிருப்பதுபோல இந்தியர்களும் ஒப்புக்கொள்ள வேண்டும். ஐரோப்பியர்களைக் காட்டிலும் இந்தியர்கள் கவுரவத்தில் குறைந்தவர்களென்பதை இந்தியா அரசாங்கத்தாரும் இந்தியா அரசாங்க ஏஜண்டு ஜெனாலும் ஏற்றுக்கொண்டு விட்டதால் இந்தியர்கள் ஐரோப்பியர்களுக்குச் சரிசமத்துவமான அந்தஸ்துப் பெற ஆசைப்படக் கூடாது."

என டர்பன் நிர்வாகியாயிருந்துவரும் ஓர் வெள்ளையன் அவனைப் பேட்டி காணச் சென்ற இந்தியப் பிரதிநிதிகளிடம் பிதற்றியிருக்கின்றான். இக் குறும்புப்பேச்சினின்றுமே அவனுக்கு நிறப்பித்தம் எவ்வளவு தூரம் மண்டைக் கேறியிருக்கிற தென்பதைத் தெரிந்துகொள்ளலாம். இந்தியா தன்னுட்சிபெற்ற நாடாக இருந்திருக்குமாயின் இவ்வெள்ளையன் இங்ஙனம் இறுமாந்து பேசியிருக்க முடியுமா? சொந்த நாட்டிலேயே பிறர்க்கடிமையாக இருக்க நேர்ந்திருக்கையில் வெளிநாட்டில் வெள்ளையனொருவன் இவ்வாறு பேசுவதில் ஆச்சரியமேதேனுமுண்டா? இந்தியர்கள் வெள்ளையர்களைக்காட்டிலும் எவ்வகையிலும தாழ்ந்தவர்களல்லவென்பதை இவனும இவன்போன்றோரும் அறியும் காலம் அதிக தூரத்திலில்லை யென்பதை அவர்கள் நெஞ்சத்திருத்திக் கொள்ளவேண்டும்.

---

## அடிகளின் இலங்கை விஜயம்.

மகாத்மா காந்தி ஐப்பசித் திங்கள் உஎ-ம் நாள் இரவு பத்து மணி சுமாருக்கு கொழும்பு வந்து சேர்ந்தார்கள். ஏராளமான ஜனங்கள் பகல் முழுதும் அண்ணலை வரவேற்க ஆவலுடன் துறைமுகத்தில் காத்திருந்தார்கள். தொழிலாளர் சங்கத்தார் இருநூறு தொண்டர்களுடன் விஜயம் செய்து கௌரவித்தார்கள்.

### நகரத்தார்களது உபசரிப்பு.

ஞாயிற்றுக்கிழமை மாலை மூன்று மணி சுமாருக்கு தனவணிக நகரத்தார்கள் ஜிந்துப்பிட்டி நாடகக் கொட்டகையில் மகாத்மாவை வரவேற்று உபசரித்தார்கள். ரூ. சு000 அடங்கிய பணப்பை அவரிடம், சமர்ப்பிக்கப் பெற்றது. மகாத்மா அவர்கள் பேசுகையில் தான் சமீபத்தில் செட்டிமார் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்ததைப் பற்றியும் அச் சமூகத்தினரின் தாராள சிந்தையைப் பற்றியும் குறிப்பிட்டு விட்டு, அவர்கள் கதர் நிதிக்குப் பொருள் கொடுப்பதோடு மட்டும் நின்றுவிடக்கூடாதென்றும் பசிப்பிணியால் வருந்தும் கோடிக் கணக்கான மக்களின் நலனை முன்னிட்டுக் கதர் தரிக்கவேண்டுமென்றும் கூறினர்.

### விவேகானந்தர் சபை.

நான்கு மணி சுமாருக்கு கொழும்பு விவேகானந்தர் சபையாரால் மகாத்மா வரவேற்கப்பட்டு உபசரிக்கப்பட்டார். ரூ. உ000 அடங்கிய பணப்பை அளிக்கப் பெற்றது. வந்தனங் கூறுகையில் இராட்டினத்தின் அவசியத்தைப் பற்றியும், கதர் தரித்தலினுல் எங்ஙனம் ஏழை மக்கட்குத் தொண்டு செய்ய முடியும் என்பதைப் பற்றியும் நன்கு விளக்கினர்.

மாலையில் காலிபேஸ் ரோட்டில் பவனிவந்தார். அவரைத் தரிசிக்க ஆயிரக்கணக்கான ஜனங்கள் மழையையும் பொருட்படுத்தாது அங்கு காத்திருந்தனர். அன்று தினத்திலேயே ரூ. க00,00 வரை வசூலாகி விட்ட அறிவிக்கப்படுகிறது.

---

## ராயல் கமிஷன்.

### மகாத்மாவின் அபிப்பிராயம்.

அரசியல் திருத்த கமிஷனைப் பற்றி மகாத்மாவின் அபிப்பிராய மென்னவென ஓர் நிருபர் மகாத்மாவை கொழும்பில் வினவிய பொழுது அவர் கூறியதாவது:—

என்னைப் பொருத்த மட்டில் நான் இவ்விஷயங்களை யெல்லாம் காங்கிரஸ் மகாசபையினிடமும் அதன் தலைவரிடமும் ஒப்புவித்துவிட்டேன்

கமிஷன் பகிஷ்காரத்தைப் பற்றிக் கேட்டபொழுது அடிகள் தெரிவித்ததாவது:—

காங்கிரஸ் தலைவர்களின் அபிப்பிராயந்தான் என் அபிப்பிராயமேயன்றி எனக்கெனத்தனி அபிப்பிராயமெதுவுமில்லை. காங்கிரஸ் மகாசபை கமிஷனைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்று முடிவுசெய்துவிட்டால் நான் அதற்குக் கட்டுப்படுவேன். எனக்கு அம்முடிவு பிடிக்காமற் போனுலும் நான் அதை எதிர்த்துப் போராட மாட்டேன்.

### சென்னை வாசிகளின் அறிக்கை.

சென்னை வாசிகளின் பொதுக் கூட்டமொன்று சென்ற சனிக்கிழமையன்று மாலை சென்னை கோகலே மண்டபத்தில் நடைபெற்றது. ஏராளமான ஜனங்கள் விஜயம் செய்திருந்தனர். அக்கூட்டத்தின் சார்பாகக் கீழ்காணும் அறிக்கை வெளியிடப்பட்டிருக்கிறது:—

சர்வ தேசங்களும் சுதந்தரத்துடன் இருப்பதற்காக மகா யுத்தம் ஏற்பட்டதென்றும், அக்கொள்கையை நிலைநாட்ட உதவி புரிய வேண்டுமென்றும் கோரியதனுல் தான் இந்தியா யுத்தத்திற்குடன்பட்டது.

உஷ்ணப் பிரதேசங்களிலும் இக்கொள்கை அனுஷ்டானத்திற்கு வருமென்று மிஸ்டர் லாயிட் ஜார்ஜ் அறிவித்தார். அக்கொள்கையை நிலை நிறுத்துவதன் பொருட்டு லட்சக்கணக்கான இந்தியர் யுத்தத்தில் தங்கள் உயிரை விட்டார்கள். தங்கள் பிரதம மந்திரி அளித்த வாக்குறுதியை பிரிட்டன் நிறைவேற்றிவைக்கும் என்ற நம்பிக்கையுடன் அவர்கள் மாய்ந்தனர். தற்சமயம் தங்களுக்கொருவித ஆபத்துமில்லையென்று அறிந்துகொண்டு அப்பிரிட்டன் இந்தியாவிற்களித்த வாக்குத் தத்தத்தை மீறி இந்தியாவின் கதி பார்லிமெண்டரிக் கமிஷனுல் நிர்ணயிக்கப்பட வேண்டுமென்றறிவிக்கிறது. இது இந்தியாவின் சுயமரியாதையைப் பாதிக்கிறது.

இதற்கு இந்தியா சம்மதிக்க முடியாது. எங்களுக்கு இக்கமிஷன் வேண்டாம். எக்காலத்தும் அக்கமிஷனை நாங்கள் லட்சியம் செய்யமாட்டோம். பார்லிமெண்டு எங்களைப் பகிஷ்கரித்திருக்கிறபடியால் நாங்களும் பார்லிமெண்டரிக் கமிஷனை பகிஷ்கரிக்கிறோம்.

---

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம் | 0—ச—0 |
| இரங்கூன் உண்டியல் வட்டம் | க—0—0 |
| சென்னை நடப்பு வட்டி | 0—ய0—க |
| இரங்கூன் நடப்பு வட்டி | 0—ய0—0 |
| பவுன் | ககூ—அ—0 |

தீர்த்தவாரி உற்சவம்:—நாளிது ஐப்பசித் திங்கள் ந0-ம் நாள் செவ்வாய்க் கிழமை காலை கடைசித் தீர்த்தவாரிக்காக நாகநாதபுரம் பெருமாள் கோவிலிலிருந்து பெருமாள் தேனூற்றுக்குப் போய் அங்கிருந்து பார்ப்பான் ஊரணி மேல்கரை மண்டகப்படிக்கு வந்து அமர்ந்திருந்தார். வழக்கம்போல் பல பிராமணர்களுக்கு அன்னமளிக்கப்பட்டது. இரவு கூ-மணிக்கு வெகு சிறப்பாக கெருட வாகனத்தில் பெருமாள் வலமாகக் கோவிலுக்குச் சென்றார்.

## தந்திச்செய்தி.

பினுங்கு, கார்த்திகைமீ கஉ

| | |
|---|---|
| சென்னை உண்டியல் விலை | நூற்று ஐம்பத்தினுன்கு. |
| ஈயம் விலை | நூற்று இருபத்தொன்பது |
| ரப்பர் விலை | எண்பத்துமூன்று |

சைகோன், கார்த்திகைமீ கஉ

| | |
|---|---|
| உண்டியல் விலை | நூற்றுநாற்பது |
| சிங்கப்பூர் வட்டம் | பத்து. |

## நிவாரண நிதி.

கூர்ஜர வெள்ளக் கஷ்ட நிவாரண நிதிக்கு, கெட்டாவிலிருந்து கீழ்காணும் அன்பர்களிடமிருந்து பணம் வசூல் செய்து திரு. ஏ. எல். எஸ். டி. எஸ். ராமசாமி செட்டியார் நமக்கனுப்பியிருக்கிறார். (ஆசிரியர்)

| பெயர். விவரம். | ரிங்கி. | | |
|---|---|---|---|
| மு. சித. | ரு | 0 | 0 |
| சொ. சித. | ந | கஉ | 0 |
| அ. க. ராம. கி. | ந | 0 | 0 |
| க. அள. ராம. | ந | 0 | 0 |
| அ. மு. க. | உ | 0 | 0 |
| சு. செ. சேவு. | உ | 0 | 0 |
| ஆரு. பழ. சி. பழ. | உ | 0 | 0 |
| சா. அரு. மெ. | உ | 0 | 0 |
| சா. லெ. ராம. செ. | உ | 0 | 0 |
| ஆரு. பழ. சி. பழ. | உ | 0 | 0 |
| உ. ராம. மெ. சு. செ. சு. | க | அ | 0 |
| சா. லெ. நா. | க | அ | 0 |
| சா. ராம. | க | அ | 0 |
| மெ. ராம. | க | 0 | 0 |
| அரு. ராம. சொ. சு. | க | 0 | 0 |
| ஆ. அ. மு. | க | 0 | 0 |
| சு. சித. | க | 0 | 0 |
| சா. காசிப்பத்தர். | க | 0 | 0 |
| ககூ-நம்பர் கடை செ.மு.அ. | க | 0 | 0 |
| அரு. நா. | 0 | அ | 0 |
| உ. தெ. உ. | 0 | அ | 0 |
| அள. அ | 0 | அ | 0 |
| அட்சாய் சி. பழ பெ. | 0 | அ | 0 |
| ஆக வரவு ரிங்கி | நகூ | வ | 0 |

இதற்கு ரூ. ருசு.

## குருகுல விஷயம்.

திருநெல்வேலி ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் கூட்டமொன்று நவம்பர் மாதம் ௬-ந் தேதி நடைபெற்றது.

ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டியின் புதிய தலைவரான ஸ்ரீமான் எஸ். பழனியாண்டி முதலியார் கீழ்காணும் தீர்மானத்தைப் பிரேரணை செய்தார்:—"சேர்மாதேவி குருகுலத்தை ஜில்லா காங்கிரஸ் கமிட்டியார் வசம் ஒப்புவிக்கும்படி ஸ்ரீமான் தி. ரா. மகாதேவய்யரைக் கேட்டுக்கொள்வதென்று தீர்மானிக்கிறது."

இத்தீர்மானத்தைக் கல்லிடைக் குறிச்சி ஸ்ரீமான் கே. பி. எக்ஞேஸ்வர சர்மா ஆட்சேபணை செய்து, குருகுலத்தின் மீது இப்போது ரூ. ௫௦௦௦த்திற்கு சிவில் வழக்கு நடந்து கொண்டிருக்கிறதென்றும், இச்சமயத்தில் காங்கிரஸ் கமிட்டியார் அதை ஒப்புக்கொள்வது உசிதமில்லையென்றும், தவிரவும் காங்கிரஸ் கமிட்டி ஒரு ராஜீய சபை யென்றும், குருகுலம் போன்ற பள்ளிக்கூடங்களை நடத்த யத்தனிப்பது சரியில்லையென்றும், குருகுலத்தை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி கையில் ஒப்புவிக்க வேண்டுமென்று கேட்பதற்கு ஒருவித உரிமையுமில்லை யென்றும் பேசினர். தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டு சாதகமாக ௬-பேரும் பாதகமாக ௫-பேரும் ஓட்டுச்செய்ததால் நிறைவேற்றப்பட்டது என ஒரு செய்தி கூறுகிறது.

சேரமாதேவி குருகுலத்தை நடத்திவந்த காலஞ்சென்ற ஸ்ரீ. வ. வெ. சு. ஐயருக்கு தாம் கொழும்பிலிருந்து பொதுநலசேவைக்காக வசூல் செய்துகொண்டு வந்த பணத்திலிருந்து ரூ. ௫௦௦௦ குருகுலத்திற்காகக் கடன் கொடுத்திருந்ததாகவும், அதைத் திரும்பக் கொடுக்கவில்லையென்றும் சொல்லி, அப்பணத்தை வசூல் செய்யும் பொருட்டு ஸ்ரீ பொ. திருகூட சுந்தரம் பிள்ளை மேற்படி குருகுலத்தின் தற்கால ஆச்சாரியரான ஸ்ரீ டி. ஆர். மகாதேவ ஐயர் மீது, திருநெல்வேலி சப் கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்திருந்தார். இவ்வழக்கு நவம்பர் மாதம் முதல் தேதி விசாரணைக்கு வந்தது. பிரதிவாதியாகிய ஸ்ரீ மகாதேவ ஐயர் ஆஜராகவில்லை. ஸ்ரீபிள்ளைக்குச் சேரவேண்டிய ரூ. ௫௦௦௦-த்திற்கும் அதன்வட்டி, செலவு தொகை முதலியவற்றிற்கும் தீர்ப்பு அளிக்கப்பட்டது.

---

### ஒருவனைப்பிடிக்க க௦௦௦ சிப்பாய்கள்.

பர்மாவில் மிகப் பிரபல கொள்ளைக் காரனை ஸான் ஹபீ என்பவன் ௨ மாதகாலமாய் க௦௦௦ சிப்பாய்களால் வேட்டையாடப்பட்டு சமீபத்தில் பிடிபட்டானும்.

---

### விநோத விவாகமுறை.

சயாம் அரசாங்கத்தார் ஒருவன் தன் கூடப்பிறந்த சகோதரியை மணஞ் செய்து கொள்ளலாம் என்றும் ஒரே சமயத்தில் ஒருவன் பல மாதர்களை விவாகஞ் செய்து கொள்ளலா மென்றும் ஒரு புதிய விவாகச் சட்டம் செய்திருக்கிறார்களாம்.

---

### கலகம்.

பரம்பக்குடி தாலுகாவைச் சேர்ந்த ஒரு கிராமத்தில் ஒரு புஞ்சை நில விவகாரசம்பந்தமாக மறவர்களுக்கும் உடையார்களுக்கும் சண்டை ஏற்பட்டதில் சௌரிமுத்து உடையார் என்பவர் கொலையுண்டார். பலர் காயமடைந்தனர். ஒரு கோனாரும் மூன்று மறவர்களும் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

---

### எழுதப் படிக்கத் தெரியாத ஆசிரியர்.

லாகூர் ஜமீன்தார் பத்திரிகையின் ஆசிரியர் மீது க௫௩ ஏ பிரிவின்படி தொடரப்பட்டிருக்கும் வழக்கில் மௌலானா ஸபர் அலிகான் எதிரி தரப்பில் சாக்ஷியாக விசாரிக்கப்பட்டார். பத்திரிகைகளில் பிரசுரமாயிருந்த பாடல்களுக்குத்தாம் செய்து கொண்ட அர்த்த மின்னதென்று அவர் சொன்னார். குறுக்கு விசாரணையில் அந்தப் பத்திரிகையின் ஆசிரியராக பலவருஷங்களாக இருந்து வரும் எதிரி எழுதப்படிக்கத் தெரியாதவர் என்பதை அவர் ஒப்புக்கொண்டார். எழுதப் படிக்கத் தெரியாதவர் எவ்விதம் பத்திரிகையை நடத்த முடியுமென்று கேட்டதற்கு மகாராஜா ரஞ்சித்சிங் எழுதப் படிக்கத் தெரியாதவராயிருந்தும் பஞ்சாபை ஆண்டுவந்தது போல் அவர் பத்திரிகையை நடத்துகிறார் என்று சொன்னார்.

---

## பல திரட்டு.

### விபத்து.

சில தினங்கள் முன் சுமார் ௧௯-வயதுள்ள ஓர் சௌராஷ்டிர வாலிபன் மதுரைக் கடுத்த திருப்பரங்குன்றத்திலுள்ள மலை உச்சியிலிருந்து கால் தவறி உருண்டு விழுந்ததால் ஒரு காலும் கையும் ஒடிந்து ஆஸ்பத்திரியில் சிகிச்சை அடைந்துவருவதாகத் தெரிகிறது.

### மகாநாடு.

காங்கிரஸ் வாரத்தில் சென்னையில் அகில இந்திய பத்திரிகைக்காரர்கள் மகாநாடு கூடும். உபசரணை சபை அங்கத்தினர் ரூபாய் ௫ கட்டணம் செலுத்த வேண்டும் என்றும், அடுத்த கூட்டத்தில், உபசரணைத் தலைவர், மகாநாட்டின் தலைவர் இவர்கள் தேர்தல் நடைபெறும் என்றும் தெரிகிறது.

### பந்தய வரி வசூல்.

க௯உஎ ம் வருஷம் அக்டோபர் மாதம் ௩௧-ந் தேதியோடு முடிவான ஒரு வருஷத்தில் இங்கிலாந்தில் பந்தய வரி மூலம் உஎ௬௬௦௦௦ பவுன் கிடைத்திருக்கிறதென்றும், நாய்ப் பந்தயத்தில் வருமானம் மிகக் குறைவாகக் கிடைத்திருக்கிறதென்றும் மிஸ்டர் வின்ஸ்டன் சர்ச்சில் பார்லிமெண்டில் அறிவித்தார்.

### ஜினீவா மகாநாடு.

வியாபாரபந்தனைகளை ரத்துச்செய்வது சம்பந்தமாக ஜினீவாவில் கூடிய மகாநாட்டில்கலந்துகொண்ட ௩௫ அரசாங்கங்களில், க௮ அரசாங்கங்கள் இப்பொழுது ஒப்பந்தத்தில் கை யெழுத்திட்டிருக்கின்றன. ஆனல் கானடா, இந்தியா, அயர்லாந்து, அமெரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய தேசங்கள் ஒப்பந்தத்தில் இன்னும் கையெழுத்திடவில்லையாம்.

### கண்டனம்.

பிரிட்டிஷ் இந்திய கமிட்டியார், தற்பொழுது நியமிக்கப்பட்டுள்ள ராயல் கமிஷன் கமிட்டியைக் கண்டிப்பதாயும், பூரண சமத்துவத்துடன் இந்திய ஜனங்கள் பிரிட்டிஷ் ஜனங்களுடன் பங்காளிகளாக இருக்க வேண்டுமென்றும், அரசாங்கத்தார் இந்தியர்களை பூரண சுயேச்சையுடைய ஜனங்களாக நடத்தவேண்டு மென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றியிருக்கின்றனர்.

### சினிமா விசாரணை.

பம்பாயில் இந்திய சினிமா விசாரணைக் கமிட்டியில், மிஸ்டர் நெயிக் சாட்சியாக விசாரிக்கப்பட்டபொழுது, திருட்டு சம்பந்தமான படங்களையும் சிற்றின்ப ரசமான படங்களையும் கடுமையாகத் தணிக்கை செய்யவேண்டுமென்றும், க௪-வயதுக்குட்பட்ட குழந்தைகளைச் சினிமாவுக்கு அனுப்பக் கூடாதென்றும், முத்தம் கொடுக்கும் படங்களையும் கண்டிப்பாகத் தடுக்கவேண்டியது அவசிய மென்றும் கூறினர்.

### கிரிக்கட் வீரரும் சிறுத்தையும்.

மத்திய மாகாணத்திலுள்ள கைமூர் என்ற ஊரில் சிலர் கிரிகட் பந்துவிளையாடிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஒரு சிறுத்தைப் புலி மட்டை வைத்திருந்த டிதாகூர் என்பவரைத் தாக்கியது. அவர் அதை ஒரே அடியாய்த் தன் மட்டையால் அடித்துக் கொன்றார். மற்றொரு சிறுத்தை வி. கே. நாயுடு என்பவர் மீது பாய அவரும் தன் மட்டையால் அதை அடித்துக் கொன்றார்.

### இந்து முஸ்லிம் கலகம்.

மீரத்து ஜில்லாவில் கார்முக்தேச்வரத்தில் கங்கா ஸ்நானத்திற்கு ஆயிரக்கணக்கான ஹிந்துக்கள் கூடியிருக்கையில் முஸ்லீம்களால் நடத்தப்பட்ட ஒரு ஜாலவேடிக்கையில் அவர்கள் கேவலமான வழியில் நர்த்தனம் செய்து ஹிந்து மாதரை அவமானம் செய்ததற்காக முஸ்லிம் கடைகள் கொள்ளையிடப்பட்டன. அதனால் க௫௦ ஹிந்து புருஷர்களும் ஒரு மாதும் கைது செய்யப்பட்டிருக்கிறார்களாம்.

### செஞ்சிஸ்கான் சமாதி.

ருஷிய பூகோள சாஸ்திர சமாஜத்தைச் சேர்ந்த புரொபெசர் கோஸ்லோவ் என்பவரால் மத்திய ஆசியாவிலுள்ள கோபி பாலைவனத்திலிருக்கும் நாஜனப்பட்டணமாகிய காராகோட்டோ என்னும் நகருக் கருகில் செஞ்சிஸ்கான் சமாதி கண்டு பிடிக்கப்பட்டது. அவர் ஒரு மொகலாய அரசர். அவர் இரு முறை சீனத்தை ஜெயித்திருக்கிறார். துருக்கியர்களை இப்பொழுது ஐரோப்பாவிலுள்ள இடத்திற்குப் போகும்படி துரத்தியவர் அவரே.

### போலீஸாரோடு போர்.

சில தினங்கள் முன் ஓர் இரவில், கள்ளிக் கோட்டைக் கருகில் குன்றில் வசிக்கும் வள்ளுவர்களின் கூட்டத்தலைவனை தாமாச்சேரி போலீசார் கைது செய்துகொண்டு வரும்பொழுது அவன் ஒரு சத்தம்போட அவனைச் சேர்ந்த பலர் கூட்டமாகவந்து போலீசாருடன் சண்டைபோட்டு அவனைத் தூக்கிக் கொண்டு போய்விட்டார்களாம். போலீசாருக்குப் பலத்தகாயம் ஏற்பட்டதென்றும் காயப்பட்ட ௫ வள்ளுவர்கள் கைது செய்யப்பட்டனர் என்றும் தெரிகிறது.

### விபத்து.

நவம்பர் மாதம் ௬-ந் தேதி லார்டு அல்லன் டேவின் ராண்ஸ் லியஸ் பிரட்டன் எனும் மாளிகைக்குச் சக்கரவர்த்தியின் புதல்வி இளவரசி மேரியும் அவர் கணவரும் விருந்தினர்களாகப் போயிருந்தார்கள். அதிகாலையில் அம் மாளிகை தீப்பிடித்துக் கொண்டது. இளவரசி மேரியும் அவர் கணவனும் உயிர் தப்பினார்கள். இளவரசியார் தீ யணைக்க முயன்றவர்களுக்கு உதவி புரிந்ததுடன் மேல் தளம் இடிந்து விழப்போவதைக் குறித்து அனைவருக்கும் எச்சரிக்கை செய்தார்.

### இந்தியப் பிரதிநிதிகள்.

கிழ் ஆபபிரிக்கா கமிஷனில் இந்தியர் சாக்ஷியம் கூறுவதற்கு உதவி செய்வதற்காக நியமிக்கப்பட்ட கன்வார் மகாராஜா சிங் நவம்பர் மாதம் க௦-ந்தேதி கண்டாலா என்ற கப்பலில் பம்பாயை விட்டுப் புறப்பட்டாராம். மிஸ்டர் இவ்பாங்ஸ் வழியில் சேர்ந்துகொள்வார். தென்னாப்பிரிக்கா கல்விக் கமிஷனுக்கு ஆலோசனை சொல்ல நியமிக்கப்பட்ட மிஸ்டர் கிச்லுவும் அதே கப்பலில்செல்லுவார். நேட்டாலுக்கு இவர் போகுமுன் கேப்டவுனுக்குச் சென்று கனம் சாஸ்திரிகளோடு கலந்து பேசுவார். இவர்கள் புறப்படுமுன் இவர்களோடு கலந்து பேச மிஸ்டர் ஆண்டிரூஸ் பம்பாய்க்கு வந்திருந்தாராம்.

### பத்திரிகை மகாநாடு.

ஜினீவாவில் சர்வதேச சங்க ஆதரவில் பத்திரிகை மகாநாடு ஆகஸ்டு மாதம் ௨௪-ந் தேதி முதல் ௩௦-ந் தேதி வரை நடை பெற்றது. இதற்கு இந்தியாவின் பிரதிநிதியாக ஸ்ரீமான் சச்சிதானந்த சின்ஹ போயிருந்தார். ௩௮ நாடுகளிலிருந்து ௬௫ பிரதிநிதிகள் வந்திருந்தனர். ௨௦ பேர் அபிஸஸர்களாக விருந்தனர். ௩௫ பேர் நிபுணர்களாக விருந்தனர். ஷை மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட முக்கியமான தீர்மானங்கள்:— சரியான வழியில் கிடைத்த செய்திகளைப் பிரசுரிக்கத் தடை எதுவுமிருக்கக்கூடாது. பொதுஜன நன்மையைக் கருதிய செய்திகளை வெளியிடாமல் அடக்கக்கூடாது. பிரசுரிக்கப்படாத விஷயங்களை வேறு இடங்களுக்கு அனுப்புகையில் பாதுகாப்புடன் அனுப்பவேண்டும். அதிகாரம் பெற்றவர்கள் மூலமே பிரசுரத்திற்குச் சமாசாரங்கள் அனுப்பப்படவேண்டும். கவர்ன்மெண்டுச் செய்திகள் என்பதற்காக விசேஷ சலுகைகள் காட்டுவது கூடாது. கட்டுப்பாடில்லாமல் கொஞ்சங் கொஞ்சமாகவோ முழுவதுமாகவோ அவற்றைப் பிரசுரிக்கலாம். செய்தி அனுப்புவோருக்குத்தக்க உதவி செய்ய வேண்டியதும் அவசியம்.

## கப்பற் செய்தி.

'ரஜுலா'க் கப்பல் நாளிது கார்த்திகைத் திங்கள் ௯-ம் நாள் ஞாயிற்றுக் கிழமை யன்று நாகபட்டினத்திலிருந்து மலாய் நாட்டிற்குப் புறப்படுகிறது.

'டைரியா'க் கப்பல் நாளிது கார்த்திகைத் திங்கள் ௭-ம் நாள் செவ்வாய்க் கிழமை யன்று மலாய் நாட்டிலிருந்து நேராக நாகபட்டினத்திற்கு வருகிறது.

'ரோஹனா'க் கப்பல் நாளிது கார்த்திகைத் திங்கள் ௮-ம் நாள் புதன் கிழமை யன்று மலாய் நாட்டிலிருந்து நேராக நாகபட்டினத்திற்கு வருகிறது.





## நமது தபால் பெட்டி.

### கிள்ளான்.

தீபாவளியும் கதருடையும்:—திரு ராம. மு. லெ. லெட்சுமணஞ் செட்டியாரவர்கள் தீபாவளிப் பண்டிகையை முன்னிட்டு நமது இந்திய ஏழைச் சகோதரர்கட்கு கதராடையும் ஸ்நானத்திற்கு நல்லெண்ணெய்யும் சீயக்காய்த்தூளும் வழங்கினார்கள். இம்மலாய் நாட்டின்கண் வசிக்கும் இந்திய ஏழைச் சகோதரர்கள் உடுக்க நான்கு முழம் துணி இல்லாது வருந்துபவர்கட்கு நமது லெட்சுமணஞ் செட்டியாரவர்கள் செய்த அறம் போற்றத்தக்கதே. எல்லாம் வல்ல எம்பெருமான் நீண்ட ஆயுளையும் மேன் மேலும் ஊக்கத்தையும் அவருக்குக் கொடுக்குமாறு வேண்டுகின்றேன் என ஒரு அன்பர் எழுதுகிறார்.

### கோ. லட்சுமிபுரம்.

ஸ்ரீ மீனாட்சி சங்கம்:— இச்சங்கத்தின் இரண்டாவதாண்டு ஏழாவது மாதக் கூட்டம் நாளிது அற்பிசித் திங்கள் ௨௯-ம் நாள் செவ்வாய்க் கிழமை மாலை ௪ மணிக்கு இந்நகர், நகர மண்டபத்தில் காரைக்குடி டாக்டர் டி. ஆர். என். தாஸ் அவர்கள் தலைமையில் சொக்கலிங்க வித்தியாசாலை மாணவர் மாணவிகளால் கடவுள் வாழ்த்துப் பாட ஆரம்பமாகியது. அஞ்ஞான்று இந்நகர் திருவாளர்களான ந. சொ. அருணாசலன் "மக்கட் பேறு" என்பது பற்றியும், ராம. இராமனாதன் "கடவுள்" என்பது பற்றியும், காரைக்குடி திருவாளர் ஆவி. லெ. அருணாசலன் 'குழந்தை தெய்வம்' என்பது பற்றியும் இனிய சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். பின்னர் தலைவரவர்கள் "சைவம், ஆரோக்கியம்" முதலிய பல விஷயங்கள் பற்றி நீண்ட நேரம் பல மொழிகள் பகர்ந்தார்கள். சுவாமிமலை திருவாளர் நாராயணசாமி பாகவதர் அவர்களால் கடவுள் வாழ்த்துப் பாடப்பெற்று, வந்தனோபசாரம் கூறி, தலைவரவர்கட்கு மாலை சூட்டி சந்தன தாம்பூலம் கற்கண்டு வழங்கப்பெற்று சபை மாலை ௭-மணிக்கு இனிது நிறைவெய்தியது என காரியதரிசி திரு. ந. சொ. அருணாசலன் எழுதுகிறார்.

### சிவகங்கை.

தாலூகா போர்டு:— ௪-௧௧-௨௭-ல் மாலை ௪—௩௦ மணிக்கு நடந்த சிவகெங்கை தாலூகா போர்டு எமர்ஜென்ட் மீட்டிங்கில் சிவகெங்கை டவுனில் தாலூகா போர்டார் பார்வையிலிருந்த ஆண்பிள்ளைகள் ஆஸ்பத்திரியையும் பெண் பிள்ளைகள் சிறு குழந்தைகள் ஆஸ்பத்திரியையும் மேலும் அபிவிருத்தி செய்யும்பொருட்டு ஆஸ்பத்திரிகளிருக்கிற கட்டிடங்களையும் ஸகல சாமான்களையும் சேர்த்து கவர்ன்மெண்டாரிடம் விட்டுவிடுவதெனத் தீர்மானிக்கப்பட்டது. இந்த ஆஸ்பத்திரிகளுக்கு செலவாகக் கூடிய பணம் இனி தகுந்த இடங்களில் தாலூகா போர்டாரால் வைத்தியசாலைகள் ஏற்படுத்துவதில் செலவிடப்படுமென எதிர்பார்க்கப்படுகிறது.

தொழில்வரி:— தேவகோட்டை சிவகெங்கை தாலூகா போர்டாரால் அயல் நாடுகளில் தொழில் நடத்துகிற நமது நகரத்தார்களுக்கு தொழில்வரி விதித்து வசூலிக்கப்படுகிறது. ஜில்லா போர்டிலும் இதை வரி அவசியமா வேண்டுவதில்லையா என்கிற தீர்மானம் யோஜனையிலிருப்பதாகத் தெரிகிறது. ஆனதால் இரண்டு தாலூகா போர்டிலுமாவது இராமனாதபுரம் ஜில்லா முழுதுமாவது தொழில் வரியை எடுத்துவிட தகுந்த முயற்சிகள் செய்ய மேற்கண்ட இரண்டு தாலூகா போர்டாரும் அனுகூலமாயிருந்து வேண்டுவன செய்வார்களென நம்புகிறேன் என திருவாளர் பி. நா. சொக்கலிங்கம் செட்டியார் எழுதுகிறார்.

### அகில இந்திய ஜீவரக்ஷண மகாநாடு.

தென்னிந்திய ஜீவரக்ஷண பிரசார சபைக் காரியதரிசி எழுதுகிறார்:—

நாளிது அக்டோபர் மாதம் ௩௦-உ நடைபெற்ற மேற்கண்ட சபை அங்கத்தினர்களின் விசேஷ கூட்டமொன்றில் வரும் காங்கிரஸ் வாரத்தில் அகில இந்திய ஜீவரக்ஷண மகாநாடு ஒன்று நடத்துவதென்று ஒருமனதாய்த் தீர்மானிக்கப்பட்டது. அதற்கு வேண்டியன செய்ய பின்வரும் கனவான்களடங்கிய கமிட்டியொன்று நியமிக்கப்பட்டது. ஸ்ரீமான்களான வி. எஸ். மல்லினாத், 'ஜெயினா கெஜட்' பத்திராதிபர், டி. வி. கலியாணசுந்தர முதலியார் "நவசக்தி" பத்திராதிபர், பி. எஸ். நெல்லையப்பபிள்ளை, "லோகோபகாரி" பத்திராதிபர், என். வி. ரங்கசாமி அய்யங்கார் Supt. S. P. C. A., சுத்தானந்த பாரதியார், இன்னும் சிலரும் சேர்ந்திருக்கின்றனர்.

வரவேற்புக் கமிட்டிக் கூட்டம்:— ௨—௧௧—௨௭-ல் வரவேற்புக் கழகக் கூட்டம் தென்னிந்திய ஜீவரக்ஷண பிரசாரசபை காரியாலயத்தில் கூடிற்று. சேத் சூரஜ் மல்தூல் சந்த் உபசரணைக் கமிட்டித் தலைவராகவும் ஸ்ரீமான்கள் C. S. மல்லிநாத், தேவ்ஷிலே மூலசந்த், இருவரும் காரியதரிசிகளாகவும், தேர்ந்தெடுக்கப்பட்டனர். உபசரணைக் கமிட்டி அங்கத்தினர் சந்தா ரூபாய் ஒன்றாகவும் பிரதிநிதிக் கட்டணம் ரூபாய் அரையாகவும் நிர்ணயிக்கப்பட்டது. இந்தியாவிலுள்ள மற்ற ஜீவரக்ஷண சபைகளைக் கலந்து கொண்டு மகாநாட்டுத் தலைவரைத் தேர்ந்தெடுக்கத் தீர்மானம் செய்யப்பட்டது. ஜீவரக்ஷண நேயர்கள் பிற விவரங்களுக்கு சென்னை தங்கசாலை வீதி ௪௩௬-ல் உள்ள மகாநாட்டுக் காரியதரிசிகளுக்கு எழுதவும்.

### தேவஸ்தான கமிட்டி.

இந்து தேவஸ்தான தர்ம பரிபாலன சட்டப்படி இராமனாதபுரம் ஜில்லா தேவஸ்தானக் கமிட்டியென ஓர் சபை ஏற்பட்டிருக்கிறது. அச்சபையின் காரியாலயம் சிவகங்கையில் இருந்து வருகிறது. இதற்குத் திருவாளர்களான எம். ஜி. முகுந்த ராஜய்யங்கார் (தலைவர்) எஸ். ராமச்சந்திரன் சேர்வை (உபதலைவர்) தேவகோட்டை அழ. அரு. நாராயணன் செட்டியார், வி. சுந்தரம் அய்யர், காரைக்குடி சு. அ. சு. ராம. ராமசாமி செட்டியார், மரு. சு. சுப்பையாசெட்டியார், இராமனாதபுரம் ராஜா அவர்களின் அந்தரங்கக் காரியதரிசியான ராஜம் நாயுடு ஆகியவர்கள் அங்கத்தவர்களாகவும் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். தலைவர் உபதலைவர் பதவிகள் தேர்தல் மூலமாக நடைபெறுகின்றன. சிவகங்கை ஜமீனுக்கும் இராமனாதபுரம் ஜமீனுக்கும் சம்பந்தப்பட்ட கோவில்கள் மடங்கள் சத்திரங்கள் முதலியன விலக்கப்பட்டிருக்கின்றன. எனவே தனவணிகர்கள் நடத்திவரும் தருமங்களைத்தான் இக்கமிட்டி பாதிக்குமெனத் தெரிகிறது. இச்சபைக்கு நியமிக்கப்பட்டவர்களின் காலவரையறை முடிந்தவுடன் தேர்தல் நடைபெறும். வாக்காளர்களின் பட்டியலும் தயாராகி விட்டதாம். அதில் பெயர் பதியப்படவேண்டியவர்களும் தவறுகளை ஆட்சேபிப்பவர்களும் டிசம்பர் முதல் தேதிக்குள் தேவகோட்டை ரெவினியூ டிவிஷனல் ஆபீசருக்கு மனுச் செய்துகொள்ளவேண்டுமென்றும், ஓட்டர்கள் ஜாப்தா தேவகோட்டை கலெக்டர் ஆபீசிலும் சிவகங்கை தேவஸ்தான போர்டு ஆபீசிலும் பொது ஜனங்களின் பார்வைக்கு வைக்கப்பட்டிருப்பதாகவும் தெரிகிறது. எனவே தங்கள் பெயர்கள் பதிவு செய்யப்படவேண்டியவர்கள் டிசம்பர் மாதம் முதல் தேதியாவது அதற்கு முன்னதாகவாவது தேவகோட்டை கலெக்டர் ஆபீசில் இலவசமாகக் கிடைக்கும் நமூனாப் பாரம் வாங்கி தங்கள் பெயர்களைப் பதிவு செய்யும்படி ஏற்பாடுகள் செய்துகொள்ள வேண்டுவது அவசியமாகும் என்று திருவாளர் பி. நா. சொக்கலிங்கம் செட்டியார் எழுதுகிறார்.

### தேவகோட்டை.

சரஸ்வதி வாசகசாலை:—பிரபவ ஆண்டு அற்பிசித் திங்கள் ௩௦ம் நாள் மாலை ஐந்து மணிக்கு இவ்வாசகசாலையின் மூன்றாவதாண்டுக்கு நிர்வாகசபையாரைத் தேர்ந்தெடுக்கும் பொருட்டு திரு. கண ஆறு சுப. சுப்பிரமண்ய செட்டியார் அவர்கள் தலைமையில் மஹாசபை கூடியது. திருவாளர் மு. அ. சுப்பிரமண்ய செட்டியாரைத் தலைவராகவும், செ. மு. லெ. அழ. இலக்குமணச் செட்டியாரைக் காரியதரிசி பொக்கிஷதாரராகவும், வெ. மு. சோம இராமநாதச் செட்டியார், மெசி. மாணிக்க வாசகச் செட்டியார், செ. சித. சோம. செல்லப்ப செட்டியார், நா. ராம. வயி. இராமநாதச் செட்டியார், சு. சு. மு. சோம. காசிவிஸ்வநாதச் செட்டியார், மு. ராம. கி. அரு. ராம. அருணாசலச் செட்டியார், சி. மு. அரு. வீர. சொக்கலிங்கச் செட்டியார், சித. மு. சித. சுப்ரமண்யச் செட்டியார் ஆகிய இவர்களை நிர்வாக சபை அங்கத்தினர்களாகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றது.

கந்தர் ஷஷ்டி உற்சவம்:—இவ்வாசகசாலையில் க௦௳ முதல் க௬௳ வரை ஸ்கந்த புராணம் வாசிக்கப்பெற்றது. க௬௳ மாலை ஐந்து மணிக்கு உயர் திரு. சொ. வேலுச்சாமிக் கவிராயர் அவர்கள் தலைமையில் திரு. மெசி. மாணிக்க வாசகன் அவர்கள் "அறம்"என்னும் பொருள்பற்றியும், திரு. வெ. மு சோம. இராமநாதச் செட்டியார் "சங்கீத ஞானமும் நமது நாடும்" என்னும் பொருள்பற்றியும்சொற்பெருக்கிட்டார்கள். தலைவர் அவர்கள் முடிப்புரை கூறியதுடன் "மனித வாழ்க்கை" என்னும் பொருள் பற்றி பேச அவை எட்டு மணிக்கு இனிது நிறைவெய்தியது.

கதர்ப் பிரசாரம்:—தீபாவளியை முன்னிட்டு இவ்வாசக சாலையின் சார்பாக இந்நகர்முக்கியஇடங்களில்௫௳முதல்௭௳வரை திருவாளர்களான இராட்டினப் புலவர் முருகன் அவர்களும், பெ. அழகு பிள்ளையவர்களும் வெ. மு. சோம. இராமநாதச் செட்டியாரும், கரு. கதி. நாச்சியப்ப செட்டியாரும் "கதர்" என்னும் பொருள்பற்றி விரிவுரைகள் நிகழ்த்தினார்கள். இப்பிரசாரத்தின் பயனாக பலர் தீபாவளியன்று கதர் அணிந்திருந்தது குறிப்பிடத்தக்கது. கதர் சம்பந்தமாக துண்டுப் பிரசுரங்கள் வழங்கப் பெற்றன என்று ஓர் நிருபர் எழுதுகிறார்.

## ராயல் கமிஷன் நியமனம்.

நெடுநாட்களாகப் பலரும் எதிர்பார்த்திருந்த ராயல் கமிஷன் நியமனம் அறிவிக்கப்பட்டுவிட்டது. அக் கமிஷனுக்கு ஸர் ஜான் ஸைமன் தலைவராகவும், பர்ன்ஹாம் பிரபு, ஸ்டிராத் கோனா பிரபு, காடேகன், ஸ்டீபன் வால்ஷ், கல்னல் ஜியார்ஜ் லேன் பாக்ஸ், மேஜர் ஸி. ஆர். அட்லி ஆகியோர் அங்கத்தவர்களாகவும் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். இவர்களது பூர்வோத்தர விவரங்கள் வருமாறு:—

### ஸர். ஜான்ஸைமன்.

இவரது முழுப் பெயர் கனம் ஜான் ஆல்ஸி புருக் ஸைமன் கே. ஸி. வி, ஒ. பி. ஸி, ஜி. பி. இ. இவர் க௮எ௩ம் ஆண்டு பிப்ரவரி உ௮ந் தேதியன்று கனம் எட்வின் ஸைமன் என்ற ஒரு கிறிஸ்தவக் கோயில் குருக்களுக்குப் பிறந்தவர். இவர் க௮௯௯ம் ஆண்டில் வக்கீல் உத்தியோகத்திற்கு வந்தார். இத்தொழிலில் இவர் அதிவிரைவாகப் பிரபல மடைந்து வந்ததன் விளைவாக க௯௦௮-ஆ கே. ஸி. ஆக்கப்பட்டதுடன் க௯க௦ல் ஸொலிஸிடர்ஜெனரல் பதவியை அடைந்தார். இதே ஆண்டில் இவர் நீதிபதிகள் சம்பந்தமாக ஏற்படுத்தப்பட்ட ஒருராயல் கமிஷனில்ஒரு அங்கத்தினராக நியமிக்கப்பட்டார். க௯௦௬-ம் ஆண்டில் இவர் வால்தாம்ஸ்டென் தொகுதியினரால் காமன்ஸ் சபைக்குத் தெரிந்தெடுக்கப்பட்டார். இவர் க௯க௩-ல் அட்டோர்னி ஜெனரல் பதவிக்கு நியமிக்கப்பட்டு நிர்வாக சபையில் ஸ்தானம் கொடுக்கப்பட்டார். க௯க௫-ம் ஆண்டு மே மாதத்தில் கூட்டு மந்திரி சபை ஏற்பட்ட பொழுது இவர் உள் நாட்டுக் காரியதரிசியாக்கப்பட்டார். ஆனல் அடுத்த வருஷத்தில் அப்பதவியை அவர் ராஜினாமாச் செய்துவிட்டார். அக்டோபர் மாதத்தில் அவர் இராணுவத்தில் சேர்ந்து பிரான்ஸில் ஆகாயப்படையின் மேஜராக இருந்து வேலை பார்த்து க௯க௮-ல் நடைபெற்ற பொதுத் தேர்தலிலும், ஸ்பென்வாலியில் நடைபெற்ற உபத் தேர்தலிலும் இவர் தோல்வியுற்றார். க௯உ௨ தேர்தலில் வெற்றி பெற்று காமன்ஸ் சபைக்கு வந்தார். இதே சமயத்தில் இவர் தாராளக் கட்சியின் டிபுடி தலைவராகத் தெரிந்தெடுக்கப்பட்டார். க௯உ௬-ம் ஆண்டில் இங்கிலாந்தில் பொது வேலை நிறுத்தம் ஏற்பட்ட காலையில், அது சட்ட விரோதமானதென இவர் அநேகம் பிரசங்கங்கள் செய்திருக்கிறார். சமீபத்தில் இவர் இந்தியாவிற்கு வந்திருக்கிறார்.

### மேயர் ஆட்லி.

இவரது முழுப்பெயர் மேஜர் கிளமெண்ட் ரிச்சேர்டு ஆட்லி. இவர் பார்லிமெண்டில் தொழிற் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர். க௮௮௩ம் ஆண்டு ஜனவரி ௩-ந் உ இவர் பிறந்தார். க௯௦௬-ல் இவர் வக்கீலாக வந்தார். ஆனல் பிறகு க௯க௩ லிருந்து க௯உ௩ வரை இவர் லண்டன் பொருளாதார பள்ளியில் ஆசிரியர் வேலைபார்த்து வந்தார். இவர் மகாயுத்தத்தின் பொழுது இராணுவத்தில் சேர்ந்தவர். க௯க௯-ல் இவர் ஸ்டெப்னி நகரத்தின் மேயராகத்தெரிந்தெடுக்கப்பட்டார். க௯உ௨ லிருந்து உ௪ வரை இவர் பார்லிமெண்டு எதிர்க்கக்ஷித்தலைவருக்குக் காரியதரிசியாயிருந்திருக்கிறார். தொழிற் கட்சி அதிகாரத்திற்கு வந்த பொழுது இவருக்கு யுத்த உதவிக்காரியதரிசி பதவி கொடுக்கப்பட்டது.

### மிஸ்டர் வால்ஷ்.

இவர் லங்காஷயர் இன்ஸ் தொகுதியால் காமன்ஸ் சபைக்கு தெரிந்தெடுக்கப்பட்டவர். தொழிற்கட்சியைச் சேர்ந்தவர். க௮௫௯-ல் லிவர்பூலில் பிறந்தவர் இவர். லங்காஷயரிலுள்ள ஒரு நிலக்கரிச் சுரங்கத்தில் வேலை செய்துகொண்டிருந்தவர். க௯௦௬-ல் இவர் காமன்ஸ் சபைக்குத் தெரிந்தெடுக்கப்பட்டார். க௯க௬-ல் இவர் தேசஊழிய மந்திரிக்குப் பார்லிமெண்டு காரியதரிசியாகவும் க௯க௭-க௮ல் லோகல் கவர்ன்மெண்டு போர்டுக்கும் நியமிக்கப்பட்டவர். க௯உ௩—உ௪ல் இவர் காமன்ஸ் சபை தொழிற்கட்சிக்கு உபதலைவராக இருந்தார். மாக்டனால்டு பிரதம மந்திரியாயிருந்த பொழுது இவர் யுத்த மந்திரியாக நியமிக்கப்பட்டார்.

### ஸ்ட்ராத் கோனா பிரபு.

இவரது முழுப்பெயர் மகாகனம் டோனால்டு ஸ்டாலிங் பாமர் ஹோவர்டு பாரன் ஸ்ட்ராத்கோனா. இவர்பார்லிமெண்டு அங்கத்தினர். க௮௯௧ ஜூன் க௪-ந்தேதி லண்டனில் பிறந்தவர். இவரும் யுத்த சேவை புரிந்தவர். க௯உ௨ல் இவர் மிஸ் டையானா இவிலின் மோடர் என்ற மாதை மணந்தார். இவர் க௯உ௪ல் மிஸ்டர் எ எம். ஸாமுவேலுக்குப் பிறகு மிஸ்டர் பிரிட்ஜ்மனுக்குப் பார்லிமெண்டு காரியதரிசியாக நியமிக்கப்பட்டார். கடந்த ஆகஸ்டு மாதம் இவருடைய தாயார் இறந்ததும் இவர் தமது பாரம்பரையான லார்டு பட்டத்தைப் பெற்றார்.

### மிஸ்டர் காடோகன்.

இவரது முழுப்பெயர் எட்வேர்ட் ஸெசில் கார் காடோகன். க௯உ௨லிருந்து பார்லிமெண்டில் முதலாளி கோஷ்டியைச் சேர்ந்த அங்கத்தினர். க௮௮௦ நவம்பர் க௫-உ பிறந்தவர். க௯௦௬ம் ஆண்டு வக்கீலாக வந்தார். மகாயுத்தத்தின்பொழுது டார்டனெல்ஸ், எகிப்து, பாலஸ்தீனம் இவைகளில் யுத்தசேவைசெய்தார். இவர் காமன்ஸ் சபைத் தலைவருக்கு சிலகாலம் காரியதரிசியாக இருந்தார்.

### பர்ன்ஹாம் பிரபு.

இவர் 'டெயிலி டெலிகிராப்' என்ற பத்திரிகையின் சொந்தக்காரர். இவரது பூர்வீகப் பெயர் ஹாரிலாஸன் வெப்ஸ்டர் லாசன். க௮௬உ டிசம்பரில் லண்டனில் பிறந்தவர். மேற்கு ஸெண்ட் பாங்கிராப் தொகுதிக்கு க௮௯௫-லிருந்து க௯௦௬ வரை பார்லிமெண்டு அங்கத்தினராக இருந்தவர். க௯உ௧—உ௨, க௯உ௬-ல் நடைபெற்ற சர்வதேசத் தொழிலாளர் மகாநாட்டிற்குத் தலைமை வகித்தவர். ஏகாதிபத்திய பத்திராசிரியர் மகாநாட்டிற்கு இருமுறை தலைமை வகித்தவர். சாம்ராஜ்ய பார்லிமெண்டரி சங்கத்திற்கு உபதலைவராயிருப்பவர்.

### லேன் பாக்ஸ்.

இவரது முழுப்பெயர் மகாகனம் ஜியார்ஜ் ரிச்சேர்டுலேன் பாக்ஸ். இவர் பார்லிமெண்டில் பாரக்ஸ்டோன் ஆஷ் தொகுதியின் பிரதிநிதியாவர். க௮௭௦ டிஸம்பரில் பிறந்தவர். இவர் ஒரு பாரிஸ்டர் க௯உ௨—உ௪ல் சுரங்க இலாகாவிற்குக் காரியதரிசியாயிருந்தவர். க௯உ௪ லிருந்து அப்பதவியிலிருந்து வருபவர்.

கையில் கொண்டு போகக்கூடிய
அழகிய கிராமபோன்
விலை ரூபாய் 8-தான்.

உறுதியான சாமான்களால் அமைக்கப்பெற்ற ஊசிகளுடனும், ஹார்னுடனும், இரண்டு பக்கமும் வைக்கக்கூடிய ஒரு பிளேட்டுடனும் நேர்த்தியான பெட்டியில் வைத்து அனுப்பப்படும். பாட்டுகள், நாட்டிய சங்கீதங்கள் பாண்டு வாத்தியங்கள் முதலிய பிளேட்டுகள் தனித்தனி விலை ரூ. 1—4—0 தபால் சார்ஜ் ரூ. 1. பிரத்தியேகம்.

Geo. PAUL & Co.,
(E 281) Triplicane, Madras.

கவலை வேண்டாம்.

உங்களுடைய வியாதி எதுவாயிருந்தாலும் சரி ஒரு அணா ஸ்டாம்புடன் விவரமாக எழுதி யனுப்பினுல் அடுத்த தபாலுக்கே நிவர்த்திக்கான வழிகளைத் தெரிவிக்கப்படும். ஸ்ரீஜக் சொக்கலிங்க ஸ்வாமிகள், தக்கோலம், அரக்கோணம், P. O. (M. S. M.) (C 272)

ஸ்ரீ நவீனகதா புத்தகசாலை

நவீன
நாவல்கள்,
அருமையான கதைகள்,
அற்புதமான
சரித்திரங்கள்,
வேதாந்த சித்தாந்த
இலக்கண இலக்கிய
சங்கீத கிரந்தங்களும்,
மந்திரீககாவியங்களும்
பள்ளிக்கூட
புத்தக திநுசுகளும்
கிடைக்கும்.

மங்கமாரி வீதி, இரங்கோன்.
(267 E.)

பாதி விலை. பாதி விலை.
லீவர் ரிஸ்ட் வாட்சு.

சரியான மணி காட்டக்கூடியதும் அழகாயும் உள்ளது. மூன்று வருஷம் உத்திரவாதம். ஸ்பெஷலாக சீமையிலிருந்து வரவழைத்திருப்பதால் பாதி விலைக்கு கொடுக்கிறோம்.

நிக்கல் வெள்ளிக்கேஸ் அசல் விலை ரூ 13
தோல்பட்டையுடன்பாதி விலை ரூ 6-8-0
இரவில் மணி பார்க்கக் கூடிய றேடியம்
லீவர் ரிஸ்ட் வாட்சு ரூ 7—8—0
லீவர் பாக்கெட் வாட்சு ரூ 3—10—0

எஸ். கண்ணன் கம்பெனி,
(E 283) நெ. 4 திருச்சினுப்பள்ளி.

இனும்! (253 E.) இனும்!!

சாரவிவேகி, சதாநந்தன்சம்பாஷணை கிழவன் குமாறுைன் இவ்விரண்டுகதைகள் அடங்கியபுத்தகம் தங்கள் விலாசம். தெரிவித்தால் இனுமாக அனுப்புவோம்.

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புத்தகசாலை,
பார்க் டவுன் (Po.) சென்னை.

## நமது 'குமரன்' மாதப்பதிப்பு.

ஒவ்வொரு வருஷத்திய பன்னிரண்டு சஞ்சிகைகளும் ஒன்றுகக் கட்டப்பெற்ற காலிகோ பயிண்டு புத்தகங்கள்.

முந்துங்கள்! அரியகட்டுரைகள் !!

விலையிலா பொக்கிஷம்.

ஒவ்வொருவரிடமும் இருக்கவேண்டியதவசியம்.

" தெள்ளுற்ற தமிழ் அமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார். "

என்பதையொப்ப, தேனினும் இனிக்கும் தெள்ளிய தண்டமிழ் நடையில் தமிழறிஞர் பலரால் வரையப்பட்ட அரிய வியாசங்கள் பலவுடன் மிளிர்கின்றன. இவை தமிழ்ச்சுவை அறிவார்க்குத் தெவிட்டாத இன்பமூட்டும் என்பதில் ஐயமில்லை. இதை யாவரும் ஒப்புக்கொண்டிருக்கின்றனர். சொற்பப் பிரதிகளே கைவசமிருக்கின்றபடியால் உங்கள் பிரதிக்கு முந்துங்கள். இடையே கட்டுரை வழங்கி யிருப்போரிற் சிலரை மட்டும் நமது வாசகர்களுக்குத் தெரிவிக்கிறோம்.

| | |
|---|---|
| ஸ்ரீ அபேதானந்த சுவாமிகள் | எஸ். வையாபுரிப் பிள்ளை |
| சுவாமி விபுலானந்தா | எஸ். தேசிக விநாயகம் பிள்ளை |
| சுவாமி வேதாசலம் | ஆர். பி. சேதுப் பிள்ளை |
| பண்டித ம. கோபாலகிருஷ்ணையர் | பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் |
| வ. வே. சு. அய்யர் | பண்டிதை சு. பாலாம்பிகை |
| சுப்பிரமணிய சிவம் | த. இராமகிருஷ்ணன் |
| திரு. வி. க. | வேதமாணுக்கன் |
| சோ. முரு. | பண்டிதை ந. பத்மாசனி அம்மாள் |
| பி. ஸ்ரீ. | |
| பண்டிதை அசலாம்பிகை அம்மாள் | |

பைண்டு புத்தகங்கள்.

முதல் வருஷத்திய புத்தகம் க-க்கு ரூ. ௨—௦—௦
௨, ௩, ௪-ம் வருஷத்திய புத்தகம்
ஒவ்வொன்றுக்கும் தனித்தனி விலை ரூ. ௩—௮—௦

தபால் செலவு பிரத்தியேகம்.

மானேஜர், குமரன் ஆபீஸ், காரைக்குடி.

மான் மார்க்கு

சந்தனத்திலம், வாசனப்பாக்கு.

மார்க்கைக் கவனித்து
வாங்குங்கள்.

ஏ. வி. அன் சன்ஸ்,
காரைக்குடி.

**WANTED.**

Candidates for Telegraph and Station Master's Classes. Full particulars and Railway Fare Certificate on 2 annas stamp.

Apply to:—Imperial
Telegraph College,
(251 E.) DELHI

இனும்! இனும்!!

படுக்கை அறையை அலங்கரிக்கும் பிரெஞ்சு லேடிகளின் அழகிய பெட்ரும் போட்டோ படங்கள் 50, எங்களுடைய உயர்தர 14 Kt. பௌண்டன் பேனு வாங்குவோர் ஒவ்வொருவருக்கும் இனும கொடுக்கப்படும். உடனே ஆர்டர் செய்யுங்கள். பேனு விலை. ரூ. 1-8-0.

மில்லர் வாட்ச் கம்பெனி.
38 பரமானந்த முதலி தெரு ஜீ. டி.
(274 C.) மதருஸ்.

காஷ்மீர் பழங்கள்! பருப்புகள்!!

புதியசிறந்த வால்நட், ருசியான பேயர் ஆப்பில் அல்லது நல்ல ஹேசல் நட் 11 பவுன்கூடை ரூ 5-8-0. புதிய நேர்த்தியான வாதுமை;ருசியான வித்தில்லாத ஏப்ரிகட், அத்திப்பழம் காய்ந்த திராக்ஷை அல்லது ஆப்பில் வளையம், 11 பவுன் கூடை ரூ 13 அப்பட்டமான தாமரைத் தேன் 5½ பவுன் ரூ 8. சுத்தமான குங்குமப்பூ தோலா ரூ 3. எல்லாம் தபாற்கூலி உள்பட. எங்களுக்குஎழுதுக.

(252 E.)
டார் பிரதர்ஸ், ஸ்ரீநகர், காஷ்மீர்.
DAR BROS, SRINAGAR KASHMIR.

தந்திவிலாசம்:— " ஹனுமான் "

ஜோதிடம்.

மகாத்மாவின் விடுதலையைத்
தெரிவித்த ஜோஸ்யர்.

(255 E.)

தர்ம நியாயமான 5-கேள்விகள் எழுதி யனுப்பினுல் எதிர்கால பலனைத்தெரிவிப்போம். கடிதம் எழுதும் நேரத்தையும் குறித்தனுப்பவேண்டும். 5கேள்விகளுக்கு ரூ. 1. அதற்கு மேல் ஒவ்வொரு கேள்விக்கும் அணு 4. ஒரு வருஷம் மாதவாரிபலன் எழுத ரூ. 2. (8-2-24-ல் சென்னை ஆந்திர பத்திரிகை பின்வருமாறு எழுதுகிறது:—திருத்தணி ஹனுமத் உபாஸி சடகோபாசாரியார் ஸ்வாமிகள் மகாத்மா காந்தி 5-2-24-ல் விடுதலை யடைவாரென்று 12-11-23-ல் எங்கள் பத்திரிகையில் பிரசுரம்செய்திருந்தார். அதன்படியே மகாத்மா விடுதலையடைந்தார். அவரது ஜோதிடத்திறமையை மனப்பூர்வமாக விக்யாபானம் செய்து கொள்ளுகிறோம்.) மற்றும் விவரத்திற்கு எழுதவும்.

ஆஞ்சநேய சுவாமி ஜோதிடாலயம்,
திருத்தணிகை, சித்தூர் ஜில்லா.

ஒரே வேளையில் வாலிபம்!

சித்த மதன கல்பம்.

இழந்துபோன தாது விருத்தியையும் நரம்புத் தளர்ச்சியையும் ஒரே மாத்திரையில் உண்டாகும். நரம்புத் தளர்ச்சி கை கால் இடுப்பின் அசதி நடுக்கம் கண்ளரிச்சல் முதலியவை அடியோடு போக்கும். கிழத்தனம் நீங்கி இணையில்லா சக்தியை உண்டாக்கும். ரத்தத்தை சுத்திசெய்து திரேகம் திடப்படும். அநேக நற்சாக்ஷிகளையுடையது. 14 மாத்திரைகள் ரூ. 1.

கெமிகோ, ஹெர்பால் பர்மஸி,
35, தங்கசாலை தெரு,
(C. 271 பார்க் டவுன், மதராஸ்.



தீராத குஷ்ட ரோகங்களை தீர்க்கும் வல்லமையுடைய பழனி ஸ்ரீமத் சற்குரு மகாதேவ ஸ்வாமிகளின் முதல் நெம்பர் தாம்பிர பற்பமேயாகும். ஏராளமான குஷ்ட ரோகிகள் இப்பழனியிலும் வெளியூர்களிலும் சௌக்யமடைந்து புகழ்ந்து கொண்டாடி வருகிறார்கள். நண்பர்கள் நேரில் விசாரித்தால் உண்மை தெரியவரும். நன்றாய் கவனித்து உண்மையைத் தெரிந்து வாங்கி உபயோகியுங்கள். நமக்கு அண்டப்புளுகு புளுகத்தெரியாது.

அசட்டையால் வரும் ஆபத்தை நீக்கி, யோசிக்கும் திறமையால் குணம் பெறலாம்.

அறிக்கை:— என் குருநாதர் ஹரித்துவாரம் மங்களபுரி பாவாஜி பெரிய யோகி மகான் நாலைந்து தலைமுறையாகக் கையாண்டுவந்த இம்முறையை நான் இருபது வருஷம் தொண்டு செய்து தெரிந்துகொண்டு சாதுக்கள் அடடாவை விட்டு பழனிக்கு வந்து அநேககொடிய ரோகஸ்தர்களுக்குக் கொடுத்து குணம் செய்ததற்குள்ள நற்சாட்சிகள் பலவுள. பக்தர், பிரபுக்கள் வேண்டுகோளுக்கிணங்கி குறைந்த விலைக்கு வெளியிடப்பட்டிருக்கின்றன. பலவித குஷ்ட ரோகங்களுக்கும் இன்னும் அனேகம் ரோகங்களுக்கும் ஏற்பட்ட அனுபானத்துடன் கொடுக்கக் கைகண்டது. பல சீதோஷ்ண ஸ்திதிக்கும் ஆண், பெண் இருபாலாரும் எந்த வயதாயிருந்தாலும் சாப்பிடச் சரியாய் அமைக்கப்பட்டது. அபார சக்தி வாய்ந்தது. வாந்தி முதலிய எவ்விதக் கெடுதலும் செய்யாதது.

முதல் நெம்பர் தாம்பர பற்பம்.

தீரும் வியாதிகள்:— கருங்குஷ்டம், செங்குஷ்டம், வெண்குஷ்டம், சொரிகுஷ்டம், பொரிகுஷ்டம், விரிகுஷ்டம், எரிகுஷ்டம், கபால குஷ்டம், குறைநோய், சில்லட்டைக்கடி, கடிவிஷங்கள் 8-ம், நீராம்பல், பெருவயிறு, மகோதரம், நீர் கவசை, குன்மம். அண்டவாய்வு, ஆனைக்கால், சூலை, திமிர், மதமதப்பு, உள்ளங்கை, உள்ளங்கால் எரிச்சல்கள், திரேகம், அழுகி தூர்நாற்றமுடையவர்கள்: ஆணிப்புண்கள், குழிப்புண், கிராணி, கண்டமாலை, பவுத்திரம் இன்னும் அநேக கொடிய ரோகங்களை வெகு சீக்கிரத்தில் 5, 10, 21, வேளைகளில் குணப்படும்.

(பாலாம்பிகை டிரேட்மார்க்)

விலை விபரம்:—

| | | | |
|---|---|---|---|
| முதல் நெ. தாம்பர பற்பம் அனுபான சூர்ணத்துடன் | 21–நாள் விலை ரூ. | 30 | (தபால் சார்ஜ் பிரத்தியேகம்) |
| ,, ,, ,, ,, | 10–நாள் விலை ரூ. | 15 | |
| 2-ம் நெ. ,, ,, ,, | 40–நாள் விலை ரூ. | 40 | |

நற்சாட்சியைக் கவனியுங்கள்:—(1) பழனியில் தாம்பிர பற்பமென்னும்பொழுது அதன் ஆசிரியரும். உற்பத்தி கர்த்தாவும்—வடஇந்தியா இமயகிரிச் சாரல் பெரிய யோகி மகான் மங்களபுரி பாவாஜியின்சீடர் பழனியில் சதானந்த மெடிக்கல் ஹால் வைத்திருக்கும் ஸ்ரீமான் சற்குரு மகாதேவ சுவாமிகள் என்ற ஞாபகம் ஜனங்களுக்கு இருக்கவேணுமாக வற்புறுத்தி சிபார்சு செய்வேன். எங்கள் குடும்பங்களிலேயும் எங்கள் பந்துக்கள் குடும்பங்களிலேயும், எங்கள் சிநேகிதர்களின் குடும்பங்களிலேயும், தீராத ரோகங்களை எல்லாம் தீர்த்து வந்தவர் இவரைத் தவிர வேறு ஒருவரையும் காணேம். சுவாமிகள் அயல்நாட்டிலுள்ள வியாதியஸ்தர்களின்மேல் வைத்துள்ள அன்பு மிகவும் பாராட்டத்தக்கதே, நண்பர்கள் சுவாமிகளின் மருந்தைக் கையாள சகல வியாதிகளும் நீங்கி சுகமடைவீர்களென்று நான் உறுதியாய்ச் சொல்லுகிறேன். (எம். வேலுச்சாமி நாடாள்வார். மிராசுதார். தாமரைக்குளம் பழனி. 8—11—25.)

(2) எனக்குள்ள பெருங் கடினமான குஷ்டரோகத்தைத் தீர்த்தவர் சுவாமிகளே (மாரியப்ப கவுண்டர் விவசாயி, பழனி. 14—7—25.)

(3) எனக்கு 6-வருஷ காலமாய் உள்ள கபால குஷ்டம் சுவாமிகளின் முதல் நெம்பர் தாம்பிர பற்பத்தால் பூரண குணமடைந்தேன். பி. வி. சேஷய்யர், பழனி தேவஸ்தானம், மணியம் 14—1—25,

(4) மகா-ா-ஸ்ரீ மகாகனம் பொருந்திய ஸ்ரீமத் சற்குரு மகாதேவஸ்வாமி அவர்களுக்கு- பினுங்கு பிறையில் (Pyre) சி. வி. தோமாஸ் எழுதிக்கொண்டது.

ஐயா, எனக்கு நீங்கள் அனுப்பிய முதல் நம்பர் தாம்பிர பற்பத்தை நான் ஐந்து நாள் சாப்பிட்டேன் கருமேக நீர் சம்மந்தமான சகல ரோகங்களும் நீங்கி சுகமாகிவிட்டது. இனியும் பாக்கி மருந்து கைவசமிருக்கிறது. கஷ்டப்படுகிறவர்களைசௌக்கியப்படுத்தி ரட்சிக்கும்பொருட்டு கடவுள் உங்களை அவதாரரூபமாக இப்பேர்ப்பட்ட ரோகங்களை சவுக்கியப்படுத்துவதற்காகவே ஏற்படுத்தியிருக்கிறார் என்பதற்குநான் நான் உறுதியாய் நம்புகிறேன். இப்படிக்கு சி. வி. தோமாஸ், அனந்தபுரம், பிறை, பினங்கு. 16—2—27.

(5) பழனி டவுன் சேர்மன் அவர்கள் சொல்வதை கவனியுங்கள்:—என் வீட்டிற்கு சமீபமாயுள்ள ஒரு பெண்ணுக்கு குமரகண்ட வலிப்பு கண்டு இங்கிலீஷ் டாக்டர்களாலும், நாட்டு வைத்தியர்களாலும் கைவிடப்பட்டு சுவாமிகளின் முதல் நீர் தாம்பிர பற்பத்தால் வெகு சீக்கிரத்தில் சௌக்கியப்படுத்திவிட்டார். சுவாமிகள் வியாதிஸ்தர்களின் விஷயத்தில், பாராட்டும் தயாள குணமும், இரக்க சிந்தையும் மிகவும் பாராட்டத்தக்கது. இவர் தயாரிக்கும் பற்பவகைகளும், செந்தூரங்களும் லேகிய வகைகளும், தைல முறைகளும், மிகவும் மேன்மையானதும் அருமையானமுறைகளால் தயாரிக்கப்பட்டு வருகின்றன. சுவாமிகளால் டவுனிலுள்ள அநேக கொடிய ரோகங்களையும், அயலூர்களிலுள்ள பிணியாளர்களையும் வெகு ஜல்தியில் சொஸ்தம் செய்கிறார் மேலும் வியாதிஸ்தர்களால் அநேகம் நற்சாக்ஷிகளும் பெற்றிருக்கிறார். ஷை சுவாமிகளிடம் அயலூரிலிருந்தும், வெளிநாடுகளிலிருந்தும், மருந்துசாப்பிடலாமென்ற விஷயத்தை இவருடைய பெருமையை பொது ஜனங்களுக்கு தெரியப்படுத்திக்கொள்வதில் எனக்கு பிரியம் அதிகம்.

M. P. மங்கல கவுண்டர். காணியாளர், மிராஸ்தார். முனிசிபல் சேர்மன் & பழனி தேவஸ்தானம் ஆனரரி டிரஸ்ட்டி.

விவரமான கேட்லாக்குக் எழுதுங்கள். ஆர்டர் செய்யுங்கள். மற்ற ஏராளமான நற்சாட்சிகளை நமது கேட்லாக்கில் பார்க்கவும்.

மலாய்நாட்டில் உள்ள நண்பர்கள் மருந்துக்கு ஆர்டர் செய்யும்போது முன் பணம் ரூ 5, அனுப்பவும்.

(E 248) ஸ்ரீமத் சற்குரு மகாதேவ ஸ்வாமிகள்,
(A) தந்தி விலாசம்:—சற்குரு, பழனி. Tel:—Address. Sarguru, Palani. சதானந்தா மெடிகல்ஹால், பழனி. மதுரை ஜில்லா, தென்னிந்தியா.

வைத்திய சாஸ்திரத்தில் மகா நிபுணர்! முப்புவைக் கண்டுபிடித்தவர் !! மதுரை சித்தவைத்திய சங்க பிரசிடெண்டு !!!
வைத்திய ஆசிரியர் பட்டமும் பெற்றவர் !!!!

என் இஷ்டம்போல் பணம் கொடுக்க இஷ்டமுள்ளவர்கள் மட்டும் நேரில்வாலாம். ரோகத்தை யறிந்து எக்ரிமெண்டின்பேரில் மருந்து கொடுக்கப்படும் வரமுடியாதவர்கள் ரோக நிதானத்தை விபரமாய் எழுதி கீழ்க்கண்ட ரேட் பிரகாரம் மருந்தை தருவித்து சாப்பிடவும். பத்தியமில்லை. நம்மிடம் தாம்பரசுன்னம் ரச சுன்னம், தாளக சுன்னம் முதலிய அனேக மருந்துகள் இருக்கின்றன. உங்கள் வியாதி எதுவாயிருந்தாலும்சரி அனேக மருந்துகளைச்சாப்பிட்டும் வியாதி தீராமல் கவலைப்படும் பிரபுக்களே! பயப்படாதீர்கள் !! நான் இருக்கின்றேன் உங்கள் வியாதி பூராவும் தீர்த்துக்கொடுத்த பிறகு என் நீங்கள் எனக்கு ரூபாய் 1000 கொடுக்கக்கூடாது? உங்கள் அந்தஸ்துபோல் டிபாசிட் கட்டவேண்டும். வியாதி தீர்ந்த பிறகு இன்னது கொடுப்பதென்று எக்ரிமெண்டு எழுதி ரிஜிஸ்டர் செய்து கொடுங்கள் வியாதி தீராவிடில் மருந்து கிரயம் தேவையில்லை. கேட்லாக் இனும்.

குஷ்டத்தினுல் இன்னும் கஷ்டப்படுகிறீர்களா?
அப்படியானுல் பழனி, ஆர். எம். கே.

# தாம்பர பஸ்பம்.

**சாப்பிடுங்கள். உங்கள் கவலை தீர்ந்துவிட்டது. சகல வியாதிகளுக்கும் கைகண்டது.**
**திமிர், குஷ்டம், ரணம், சூலை, கிரந்தி, மேகம், பத்து, தடிப்புகள் மாறிவிட்டது.**
**மதமதப்பு மாறி சொரணை யுண்டாகிவிட்டது. ஆராத குழிப்புண் ஆறிவிட்டது.**

இருமல், குன்மம், வெள்ளை, வெட்டை, கடுப்பு, எரிச்சல், சூலை, கிரந்தி, மேகமெல்லாம் தீர்ந்து விட்டதென்று தினம் நற்சாக்ஷிகள் வந்த வண்ணமாயிருக்கின்றன. வியாதிகளை விபரமாய் எழுதவும் சகலவித கர்ம வியாதிகளும் கண்டிப்பாய்த் தீரும். (பேப்பரைக் குறிப்பிட்டு எழுதவும்.)

100-வேளை தாம்பர பஸ்பம் அனுபான சூரணத்துடன் விலை. ரூ. 50.
50-வேளை மருந்து ரூ. 25. ஏழைகட்குப் பாதி விலை. பிரபுக்களுக்கு ரேட் வேறு.

நற்சாக்ஷி:—உலக ரக்ஷகராயிருக்கக்கூடிய எனது அன்பார்ந்த அய்யா! தாங்கள் உலக முடிவடைகிற வரைக்கும் அகஸ்தியர்போல் நீடூழி வாழக்கடவது தங்கள் தாம்பரபஸ்பத்தை தஞ்சாவூர் தாலுக்கா நடுக்காவேரி நடேச கஸ்தூரியர் 2-தடவை எனது சிறிய தாயார் குழந்தைக்கு வாங்கிக் கொடுத்ததில் முதல் டயத்தில் காலில் புண்ணுயிருந்தது. 2-தடவையில் சுகமாகிவிட்டது. தங்களுடைய தாம்பிர பஸ்பத்தின் மகத்துவத்தை எனது நாவினுல் எடுத்துரைக்கக் கூடவில்லை. 20 நாளைக்குத் தகுந்த தாம்பிர பஸ்பமும் குஷ்டரோகச் சூரணமும் அனுப்பவும். தங்கள் பாதாரவிந்த ஊழியன்.

அ. பிச்சையப்ப செட்டியார், அம்பிள் (வயா) லால்குடி. 18—3—25.

தந்தி விலாசம்:—" சித்தர் பழனி "
Tel:—" SIDDHAR PALNI "

வைத்திய ஆசிரியர், ஆர். எம். கே. வேலுசாமி பிள்ளை,
சித்த வைத்தியசாலை, பழனி. [PALNI.]

(4) (E 259) நமது பிராஞ்சு வைத்தியசாலை:—ஏஜண்ட், என். தண்டபாணி கம்பெனி, 6-69, பவழக்காரத்தெரு, சென்னை.

இனும் ரூபாய் 100! இதில் குணமில்லையென்று நிரூபிப்பவர்களுக்கு எல்லா ஷாப்புகளிலும் கிடைக்கும்.

அந்நிய நாட்டில் விரும்புவோர் 1 டஜனுக்கு தபால் சார்ஜ் ரூ. 1-12-0 ம் ஒரு குரோசுக்கு கப்பல் சார்ஜ் ரூ. 4-8-0 சேர்த்து முன்பணமாக ஆர்டருடன் அனுப்பவேண்டும்.

# ஸ்ரீகிருஷ்ணா டென்டல்பாம்

மைசூர் கவர்ன்மெண்டாராலும், நியூயார்க், லண்டன், டோக்கியோ, பெர்லின், பாரிஸ், அமெரிக்கா முதலிய தேசங்களின் இண்டர்நேஷனல் சொஸைட்டியாராலும் பரிசிலனைசெய்து நற்சாக்ஷிப்பத்திரம் பெற்றது. தக்கவியாதிகளைப்போக்கி பற்களை உறுதியாக்கும் பற்பொடி.

பாட்டில் 1க்கு ரூ. **0—4—0**, டஜன் 1-க்கு ரூ. **2—4—0**, குரோஸ் 1-க்கு ரூ. **24—0—0** பாக்கிங் & தபால் சார்ஜ் பிரத்தியேகம்.

மலாய் நாடுகளுக்கு சோல்ஏஜண்டுகள்:—
ஆர் இ. முகம்மது காசிம் அண்டு கம்பெனி, கிள்ளாங், பினங்கு, சிங்கப்பூர். }

ஸ்ரீ கிருஷ்ணா & கோ., மன்னார்குடி. (S. I. Ry.) (261 E)

## சதா சௌக்கிய சஞ்சீவி லேகியம்.

வெகுமதி 500 ரூபாய்கள்.

இதில் சிறந்த விலையுள்ள உலோக பஸ்பங்களும் அசல் கஸ்தூரியும் சேர்க்கப்பட்டுள்ளது இது ரத்தத்தை சுத்திசெய்து தாதுபுஷ்டியைக் கொடுத்து மனோவுல்லாசத்தை கொடுக்கும். பசியை உண்டாக்கி திடசரீரத்தைக் கொடுக்கும். அஜீரணம், பித்தம் சர்வமேகங்கள், வாத ரோகங்களைக் குணப்படுத்தும். வீரிய நஷ்டம், நீர் எரிச்சல், வெட்டை வெள்ளை, மேக கிரந்தி முதலிய காரணங்களினால் ஏற்படுகின்ற துர் வியாதிகளை குணப்படுத்தும். ரசபிடிப்பு, இருமல், சுவாச காசம், கபம் மூலவியாதிகளையும் மூளை சம்பந்தமான சகல வியாதிகளையும் குணப்படுத்தும். கண்ணோய்களை நீக்கும். நல்ல ஞாபக சக்தியை கொடுக்கும் ஓர் திவ்விய ஔஷதம். இது பள்ளிக்கூடங்களில் படிக்கும் மாணவர்களுக்கு மிகச்சிறந்தது. ஸ்திரீகளுக்கு வெள்ளை, சிவப்பு கழிதல், மாத விடாய் காலத்தில் உண்டாகும் வயற்றுவலி, சூலை, மற்ற கர்ப்பாச நோய்களையும் குணப்படுத்தும். மலபந்தங்களை குணப்படுத்தி பிரதி காலையிலும் சுகமாக மல பிரவர்த்தியாகும். இந்த லேகியம் பல மூலிகைகளால் தயாரிக்கப்பட்டு நல்ல விலையுள்ள உலோக முதலிய பஸ்பங்களும் கஸ்தூரியும் சேர்ந்துள்ளது. அப்படியில்லை, மேல் சொன்ன எல்லா குணங்களும் இல்லை, இதில் ரசம், விஷம், கந்தகம் கலந்து இருக்கும் என்று நிரூபிக்கின்றவர்களுக்கு ரூபாய் 500 இனும் கொடுக்கப்படும். எல்லாரும் உபயோகிக்கும்படி குறைந்த விலைக்கு விற்க ஏற்பாடு செய்திருக்கிறோம். இதை சாப்பிட்டு இதின் அற்புத குணத்தை அறிந்த ஒவ்வொருவரும் இந்த 12 துலாம் லேகியம் 100 துலாம் பொன்னுக்கு சமமென்று சொல்லுவார்கள். இதை உபயோகிக்கும் போதுயாதொரு பத்தியமாவது அனுபானமாவது கிடையாது.

12-துலாம் லேகியம் ரு. 2—8—0.    தபால்செலவு வகையாரா ரு. 0—8—0

### அசல் சைனா கஸ்தூரி.

நம்முடைய மருந்துக்களுக்காக நாம் மிகவும் சிரமப்பட்டு அசல் கஸ்தூரியைவரவழைக்கிறோம். இதை புண்ணியத்திற்காக பொதுஜன நன்மையைக் கோரி மிகவும் குறைந்த விலைக்கு விற்கிறோம். மிகவும் மேன்மையான கஸ்தூரி தோலா 1-க்கு ரு. 25.    முதல் நேம்பர் கஸ்தூரி தோலா 1-க்கு ரு. 20.

எட்டு அணா அனுப்புகிறவர்களுக்கு மாதிரி அனுப்பப்படும்.

ஒவ்வொரு வீட்டிற்கும் எப்பொழுதும் அவசியமான

### சுகந்த மூக்குப் பொடி.

பொருக்கி எடுத்த புகையிலையினால் இதர முக்கியமான சேர்க்கை பொருள்களைக்கொண்டு செய்யப்பட்டது. மூக்கு முகவாய், தொண்டை மூளை முதலான இடங்களில் உண்டாகும் நோய்களை உடனே தீர்க்கும். வழக்கமாய் உபயோகிப்பவர்களுக்கு இது ஒரு வரப்பிரசாதம்.

ஒரு புட்டி விலை 4 அணா.   12-புட்டிகள் விலை ரு. 2—8—0.
பாக்கிங் தபால் சார்ஜ் வேறு.

ஒரு அணா அனுப்புகிறவர்களுக்கு மாதிரி அனுப்பப்படும்.

தி. பூனானி மெடிகல்ஹால்,
(263 E.)    46, கந்தப்பமுதலி ஹைரோடு, புரசைபாக்கம், மதருஸ்.

உங்களுடைய விலைபெற்ற பொருள்களைப் பத்திரப்படுத்துவதற்கு இரும்புப் பெட்டி தேவையா? கனத்த தகட்டினால் செய்யப் பெற்ற கெட்டியான இரும்புப் பெட்டிகள் எங்களிடம் தயாராயிருக்கின்றன. ஆயிரம் வருஷத்துக்குமேல் இருக்கக்கூடிய அழியாதபொருள்இந்தப் பெட்டி யொன்றிருக்குமானால் நெருப்புக்கும் திருட்டுக்கும் பயமில்லை. அழகான வர்ணம்வைக்கப் பெற்றிருக்கின்றன. S. I. R. கம்பெனியாரால் நன்மதிப்பும் பெற்றிருக்கின்றன.

மு. அ. அண்டு அ. நா. அ.
இராமசாமிசெட்டியார் & கம்பெனி

இரும்புப் பெட்டி உற்பத்திசாலை, நெ. 2/70, பிராட்வே, மதராஸ். சுப்போ அ. நா. அ. கடையிலும், இரங்கூன் வயி.ராம, அரு. கடையிலும், உடுமலைப்பேட்டை அ. வீர. சித கடையிலும், ஆடர்கள் கொடுத்தும், இராமநாதபுரம் ஜில்லா கண்டனூர் அ. நா. அ. இராமசாமிசெட்டியார் வீட்டிலும் கிடைக்கும்.

(E 262)

வியாபாரத்தின் சூக்ஷமம் விளம்பரமே.
குறைந்த விகிதத்திற்கு குமரனில் விளம்பரம் செய்யுங்கள்.

ஆங்கிலம் படிக்க விரும்பும் அன்பர்களே நீங்கள்
ஏன் கவலைப்படுகிறீர்கள்!

40,000 ஜனங்களால் வாசித்து எங்கும் பிரபல்யமடைந்த எமது

## ஆங்கில ஆசான்

தமிழ் எழுத்துக்களை வாசித்தால் இங்கிலீஷ் பதங்கள் வெகு சுலபமாய்த் தெரிந்துகொள்ளலாம்.
இது 9-ம் பதிப்பு, 800 பக்கம் கொண்ட ஓர் பெரிய புத்தகம்.

உபாத்தியாயர் இல்லாமல் சுலபமாய் இங்கிலீஷ் கற்றுக்கொள்ள உதவும் புத்தகம் இதுதான். இதுமாதர்களுக்கும், வியாபாரிகளுக்கும், தொழிலாளிகளுக்கும், மிகவும் முக்கியமானது. இப்பதிப்பில் மிகவும் சிரமப்பட்டு 1-அணா முதல் 3,000 ரூ. வரைக்கும் மாதச் சம்பள கணக்கு போடப்பட்டிருக்கிறது. இதற்குப்பின் வந்துள்ள போலி புத்தகங்களை வாங்கி ஏமாறுமல், இந்தப்படத்தில் காட்டியுள்ள லேடி டிரேட்மார்க் போட்டுள்ளதை பார்த்து வாங்குங்கள்.

முழுகாலிகோ பைண்டு புத்தகம் 1-க்கு ரூ 2
வி. பி. தபால் செலவு அணா 8.
அந்நிய நாட்டினர் முன்பணம் அனுப்பவேண்டும்.

தி. இராஜகோபால் முதலியார், தங்கசாலை வீதி, சென்னை.

முந்துங்கள்.]    [உடனே சேருங்கள்.

இரண்டாம் ஆண்டு தொடங்கிவிட்டது.

வித்வத்துவம்! அநுபவம்! ஆச்சரியம்! விநோதம்! ஆநந்தம்!
விசித்திரம்! அற்புதம் இவைகளெல்லாம் அடைவது எப்படி?

## ஆனந்த குணபோதினி.

அறிவை விளக்கி உற்சாகத்தைத் தர வல்லதான உயர்ந்த
நூதன செந்தமிழ் மாதப் பத்திரிகை
அக்ஷயவருஷ சித்திரை மாதத்திலிருந்து வெளிவந்துலவுகிறது.
பத்திராசிரியர்:—ஸ்ரீமான் எஸ். ஜி. இராமாநுஜலுநாயுடு அவர்கள்.

வருஷ சந்தா: இந்தியா பர்மா சிலோன் முதலிய இடங்களுக்கு ரூ 1 0
மாதிரிப்பிரதி இனாம்.    வெளிநாடுகளுக்கு ரூ 1 4
சென்ற அக்ஷயவருஷ அழகிய காலிகோ பவுண்டு வால்யம் ரு. 1 6

(E 260)    தி. இராஜகோபால் முதலியார்,
ஆநந்த குணபோதினி ஆபீஸ், 392, தங்கசாலை வீதி, சென்னை.

யுனைடெட் இந்தியா லைப்

## அஷ்யூரன்ஸ் கம்பெனி,

(லிமிடெட்.)
தலைமை ஆபீஸ்—மதராஸ்

ஸ்தாபனம் 1906-ம் வருஷம்
சென்னை மாகாணத்திலுள்ள லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி இதுவே.

அக்கிராசனர்:—
ஸர். எம். ஸி. டி. முத்தையா செட்டியார் K. T., M. L. A.
சமீபத்தில் 5 வருஷத்திற்கென்று விநியோகிக்கப்பட்ட
போனஸ் அஷ்யூரென்ஸ் தொகை ரூ 1000-க்கு ரூ 75.

ப்ரீமியம் மிதமானது.    நிபந்தனைகள்—சுலபமானவை.
கிரேஸ் டயம் கொடுப்பதை ஒத்திவைப்பது—இதில் ஓர் விசேஷம்.
பாத்தியதைகளை உடனே கவனிப்பது—ஓர் முக்கிய அம்சமாகும்.

"இந்தியாவிலே மிகவும் உறுதியானதும், பணத்தை யுடையதும், மேலான நிர்வாகத் திறமையுடையதும் மிகச் சிக்கனத்துடன் கூடியதுமான கம்பெனிகளில் இதுவுமொன்று. லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனிகளில் முதன்மையானவற்றில் இது ஒன்றாகும்" என்று "பார்வார்டு" வருஷ அனுபந்தப் பிரசுரத்தில் காணப்படுகிறது.

விவரங்களுக்கு அடியிற் கண்டவருக்கு எழுதவும்.

எம். ராமமூர்த்தி, சீப் ஏஜெண்டு,
ராமநாதபுரம் அண் புதுக்கோட்டை,
காரைக்குடி. }    மானேஜர்:—
ஸ்டார் அண் கம்பெனி.
(265 E.)



லக்ஷ்மி டைல் ஒர்க்ஸ்.

சிமிண்டினால் நானாவித வர்ணங்களுடன்

# பரப்பு கற்கள்.

சித்திரவேலை செய்த பலதினுசு

## சதுர கற்கள்.

எங்களால் தயாரித்து விற்கப்பட்டு வருகின்றன.

குணத்திலும், உறுதியிலும், அழகிலும், மிகாற்றவை. ரெத்தின கம்பளம் விரித்ததுபோல் அலங்காரமாகஇருக்கும். புழக்கத்தினால் பளபளப்புக் கொடுக்கும். ஆரோக்கியத்திற்கு மிகவும் யோக்கியமானவை. இதர களிமண் கற்களைப்போல் சரிக்காது. மேல்மட்டம் சுத்தமாயிருப்பதால் தூசி அடையாது. அடிக்கடி புதுப்பிக்கவேண்டிய அவசியமில்லை. யாவரும் வாங்கி எல்லாவித கட்டிடங்களிலும் உபயோகிக்கலாம். பலதினுசு கற்கள் கைவசமிருக்கின்றன.

(1) கல்லின் அளவு 6 அங்குல சதுரம்.   ஒரு சதுர கஜத்திற்கு 36 கற்கள்.
(2) கல்லின் அளவு 8 அங்குல ஒரு சதுர கஜத்திற்கு 20 கற்கள்.

(E 250)

V குப்புஸாமி அய்யர், (புரோப்ரைட்டர்.) லக்ஷ்மி டைல் வொர்க்ஸ், புதுக்கோட்டை.

## சாஸ்திர சம்மதமான ஜோதிடம்.

அது என்ன நற்சகுனமென்றால்?

திருத்தணியில் 15 தலைமுறை பரம்பரையாக மகா பிரசித்திபெற்ற ஸ்ரீ சிவசுப்ரமணிய ஜோஸ்யரால் உண்மையாகவும் சாஸ்திர சம்மதமாயும் அவாள் அவாள் கோரும் பாவ புண்யங்களுக்குத் தகுந்த காரணத்துடன் பதில் யெழுதி அனுப்புகிறோம். நியாயமான 6 கேள்விகளுக்கு ரூ. 1—0—0. மேல் ஒவ்வொரு கேள்விகளுக்கும் 0—4—0. ஒரு வருஷ பலன் சாஸ்திர சம்மதமான ஜவாப்புடன் எழுத ரூ. 5—0—0. பிரஸ்னை கேழ்க்கும்போதுன்ன கோத்ததைலெட்டரில் குறிப்பிட்டு எழுதவேண்டியது. எதிர்கால பலனைப்பற்றி நாங்கள் யெழுதும் பலன்கள் தந்தியில் கேட்டு தெரிந்து கொள்ளக் கூடியதாய் இருக்கும்.

எல்லாக் காரியங்களிலும் ஆச்சர்யமான பலனைக் கைமேல் கொடுக்கும்

### சர்வ ஜய வசீகரணி.

வெள்ளி தாயித்து ஒன்றுக்கு ரூ. 2—8—0. டி சாதா ரூ. 1—0—0. ஸ்பெஷல் தாயித்து 1-க்கு ரூ. 20—0—0.

இதன் பலனை நாங்கள் சொல்லி முடியாது. ஒரு தடவைவாங்கி அதன் பலனையும் லாபத்தையும் அடையுங்கள். மற்ற விபரங்களுக்கு நேரிலாவது லெட்டர் மூலமாவது எழுதித் தெரிந்துகொள்ளலாம்.

விலாசம்:— ஸ்ரீ சிவசுப்ரமணிய ஜோதிடாலயம்,
(E. 249)    திருத்தணி. (சித்தூர் ஜில்லா)

### ஆச்சரியமான புஸ்தகம்.

தமிழில் இதுதான் முதல் புஸ்தகம்.
தாய்த்து, கவசம், மந்திரங்களைப் பற்றியது.

உண்மையான பலனளிக்கத்தக்க தாய்த்துகள் செய்ய சுலபமான வழிகள் இதில் அடங்கியிருக்கின்றன. யார் யாருக்கு எதெதில் ஆசையுண்டோ அதற்கெல்லாம் தாய்த்து உண்டு; செல்வத்தக்கும், அதிர்ஷ்டம் ஆரோக்கியம், சுபிட்சம், எதில் இறங்கினாலும் ஜெயம். எல்லாவித வியாதியையும் சொஸ்தம் செய்ய, துரதிர்ஷ்டத்தை விலக்க, நவக்கிரஹ பீடையைப்போக்க, இடம்பம் சுகம் இவைகளைப்பெற வழக்கில் ஜெயமடைய, வம்ச விருத்தி யடைய பிறரிடமிருந்து சவுகரியமடைய, பூர்ணாயுளுள்ள குழந்தைகளைப் பெற முதலான பல விஷயங்களுக்கும் தாய்த்து இருக்கின்றன. மேலும் வியாதிகளை சொஸ்தம் செய்யவும், சங்கா தோஷத்தைப் போக்கவும், சம் இஷ்டப்பிராப்தியடையவும் க்ஷேமமடைய ஆயுள் நீண்டிருக்க, சந்தோஷமடைந்துவாழ, பாம்பு விஷத்தை இறக்க முதலிய அம்சங்களுக்குச் சுலபமான தீங்கு செய்யாத மந்திரங்களுள எல்லாரும் சுலபமாய் அறியலாம். மிக்க உபயோகமானது பொதுஜன க்ஷேமத்தை கோர்த்து செய்த இப்படிப்பட்ட புத்தகம் வேறு இல்லை. இதுவே முதல் புத்தகம். எங்களை நம்பி ஒரு தடவை பார்த்தால் இதன் உண்மை நன்றாகத் தெரியும். விலை ரூபாய் அரை தபால் சார்ஜ் வேறு. வெளியூர்களுக்கு ஒரு ஷிலிங்.

புஸ்தகங்களுக்கு எழுதுபவர்கள் தங்களுடைய முழு விலாசங்களை தெளிவாகவும் விவரமாகவும் எழுதவேண்டும்.

Tata Indian Science Institute,
(273 C.)    Vizianagaram City.

# THE MAHATHMA GLOBE TRADING COMPANY.

Office:-Tiruppur, [S. India.]

## மகாத்மா குளோப் டிரேடிங் கம்பெனி,

திருப்பூர், (தென் இந்தியா.)

பிழைக்கும் வழி !    கனவான்களே கவனியுங்கள் !!    முக்கியமான விளம்பரம் !!!

கத்தர் அரசரின் கத்தர் தலைமைநகராகிய திருப்பூருக்கு சுற்றுவட்டங்களிலுள்ள ஏராளமான கிராமங்களில் பாரத அன்னையின் அருந்தவப் புதல்வராயும் உலக சிரேஷ்டராயும் விளங்கும் நமது மகாத்மாஜி அவர்களின் ஆஞ்ஞைப்படி அசல் சுயக்கத்தர் பலவகை தினுசுகள் ஏராளமாய் உற்பத்தி செய்யப்பட்டு வருவது சகல தேசத்தாருக்கும் நன்கு தெரிந்ததே.

இந்தியா, பர்மா, சிலோன், மலேயா, கோலாலம்பூர், தென் ஆப்பிரிக்கா,சிங்கப்பூர் முதலிய பல இடங்களுக்கும் கத்தர் தினுசுகளுக்கு ஆர்டர் வாங்க ஏஜண்டுகள் தேவை.

அங்கேரிபாளையம், வேலம்பாளையம், அனுப்பப்பாளையம், ஆத்துப்பாளையம், இந்த கிராமங்களில், வெண்கலப் பாத்திரங்கள் பித்தளை பாத்திரங்கள் மாதம் மாதம் லக்ஷம் ரூபாய்க்கு தயாராகிறது. சொல்ப லாபத்திற்கு ஷை சாமான்கள் முதல்தரமாயுள்ளதை ரயில், வி. பி. யில் அனுப்பப்படும்.

தேவையானவர்களுக்கு ஆர்டர்கள் முன் அட்வான்சுடன் 100-க்கு 25 ரூபாய் வீதம் அனுப்பும் ஆர்டர்களைமட்டும் கவனித்து உடனுக்குடன் நயமான சரக்குகளை அனுப்பப்படும்.

ஒருதடவை பரீட்சை பாருங்கள். ஒவ்வொரு டவுன்களிலும் கத்தர் தினுசுகளுக்கும், பாத்திரங்களுக்கும், ஆர்டர்கள் வாங்க ஏஜண்டுகள் சீக்கிரம் நியமிக்கப்படும். 50 ரூபாயுடன் அனுப்பும் ஏஜண்டு விண்ணப்பத்தை மட்டும் கவனித்து ஏஜண்டாக நியமனம் செய்து ஆர்டர் அடுத்த மெயிலில் அனுப்பப்படும். பலநண்பர்களின் வேண்டுகோளின்பேரில் இக்கம்பெனியை 1 லக்ஷம் ரூபாய்க்கு 20000 பங்குகளாகப் பிரித்தும் பங்கு 1-க்கு 5 ரூபாய் வீதம் ரிஜிஸ்டர் செய்ய தீர்மானித்திருக்கிறோம். தக்க சம்பளத்துடன் ஷேர்கள் சேர்க்க சகலடவுன்களுக்கும் ஏஜண்டுகள் தேவை. 50 ரூ. டிபாசிட்டும் விண்னபத்துடன ரிஜிஸ்டர் செய்து அனுப்பவும்.

மற்ற விபரத்திற்கு ஒரு அணா ஸ்டாம்புடன் எழுதவும்.

சேர்மென் & மானேஜிங் டைரெக்டர்,
(E 277)    மஹாத்மா குளோப் டிரேடிங் கம்பெனி,
திருப்பூர், (தென் இந்தியா)

